*Tirruppukalamirtam*
*Malar 13, ital 3*
*June 1948*

Record no. 166

உ
முருகா

# திருப்புகழமிர்தம்

சர்வதாரி ஸூ மாதவெளியீடு ஆனி மீ




ஆசிரியர்:

**கிருபானந்தவாரி**

தனிப்பிரதி] [0-3-0

Best copy available







## ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அவதார நல்விழா

சர்வதாரி௵, ஆனிமீ, 8௳ (21-6-48) திங்கட்கிழமை.

**1. காங்கேயநல்லூரில்;**

சிவத்திரு. மல்லையதாஸ் பாகவதர் அவர்களால் ஸ்ரீ முருகப் பெருமான் திருக்கோவிலில் மிக சிறப்பாகக் கொண்டாடப்பெறும்.

**2. மோகனூரில்** (கரூர் சமீபம்)

காந்தமலை ஆண்டவன் சன்னிதியில் சிறந்த நிகழ்ச்சிகளுடன் நடைபெறும்.

**3 வயலூரில்:**

வயற்பதி வாழ் வள்ளலின் திருக்கோயிலில், நாச்சிக் குறிச்சி, திரு. துரைசாமி நாடார், முதலிய அன்பர்களால் கொண்டாடப் பெறும். நமது ஆசிரியரும் உடனிருந்து விரிவுரை நிகழ்த்துவார்கள்

**4. மதுரை, திருநெல்வேலி, சேலம்** முதலிய இடங்களில் திருப்புகழ் சபையார்களால் கொண்டாடப்பெறும்.

---

# திருப்புகழ்த் திரட்டு

திருமுருக கிருபானந்தவாரி அவர்கள் தொகுத்தது. திருப்புகழ் 238, திருவகுப்பு 8, கந்தரந்தாதி 8, கந்தரலங்காரம், கந்தரநுபூதி, வேல் விருத்தம், மயில் விருத்தம், பிள்ளைத் தமிழ்ப்பாடல்கள், திருமுருகாற்றுப்படை, திருப்புகழ் அஷ்டோத்தரம், ஆறுபடை வீட்டுப்படங்கள், முதலியன அடங்கியது. கிரௌன், 1/8 அளவில் சுமார் 260 பக்கங்கள் கொண்டது. விலை ரூ. 2—0—0 தபாற்செலவு ரூ. 0—7—0 வேண்டுவோர் உடனே முன்பணமனுப்பிப் பெற்றுக்கொள்ளவும். வி. பி. கிடையாது.

திருப்புகழமிர்தம் காரியாலயம்,
சிந்தாதிரிப்பேட்டை. :: சென்னை 2

---

## "வழி காட்டி," கைவசம் கிடையாது.

---

### வேலூர் சண்முகனடியார் சங்கம்

திருப்புகழமிர்தம் ஆசிரியர் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் நானது ஆனிமீ 13௳ சனிக்கிழமை இரவு 9 மணிக்கு வேலூர் ஸ்ரீ சண்முகனடியார் சங்கத்தில் "சீதாகல்யாணம்" என்பது குறித்து விரிவுரை நிகழ்த்துவார்கள்.

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றுள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"


| | | |
|---|---|---|
| மலர் ௧௩ Vol 13 | சர்வதாரி ௵ ஆனிமீ ௧௨ ஜூன் 1948 | இதழ் ௩ NO 3 |


## திருப்புகழ்.

### இராமேசுரம்.

வாலவய தாகியழ காகிமத ஞகிபணி
வாணிபமொ டாடிமரு ளாடிவிளை யாடிவிழல்
வாழ்வுசத மாகிவலு வாகிமட கூடமொடு
பொருள்தேடி-

வாசபுழு கோடுமல ரோடுமன மாகிமகிழ்
வாசனைக ளாதியிட லாகிமய லாகிவிலை
மாதர்களை மேவியவ ராசைதனி லேசுழல
சிலநாள்போய்;

தோல்திரைக ளாகிநரை யாகிகுரு டாகியிரு
கால்கள்தடு மாறிசெவி மாறிபசு பாசபதி
சூழ்கதிகள் மாறிசுக மாறிதடி யோடுதிரி
யுறுநாளிற்-

சூலைசொரி யீளைவலி வாதமொடு நீரிழிவு
சோகைகள மாலைசுர மோடுபிணி தூறிருமல்
சூழலுற மூலகசு மாலமென நாறியுட
லழிவேனோ;

நாலுமுக ஞதியரி யோமெனஅ தாரமுரை
யாதபிர மாவைவிழ மோதிபொரு ளோதுகென
நாலுசிர மோடுசிகை தூளிபட தாளமிடு
மிளையோனே-

நாறிதழி வேணிசிவ ரூபகலி யாணிமுத
வீணமக வானைமகிழ் தோழவன மீதுசெறி
ஞானகுற மாதைதினை காவில்மண மேவுபுகழ்
மயில்வீரா;

ஓலமிடு தாடகைசு வாகுவள ரேழுமரம்
வாலியொடு நீலிபக னேடொருவி ராதனெழு
மோதகட லோடுவிறல் ராவணகு ழாமமரில்
பொடியாக-

ஓகைதழல் வாளிவிடு மூரிதநு நேமிவளை
பாணிதிரு மார்பனரி கேசன்மரு காஎனவெ
யோதமறை ராமெசுர மேவுகும ராவமரர்
பெருமாளே.

பதவுரை

நாலுமுகன் – நான்கு முகங்களையுடைய பிரமதேவர், ஆதி – வேதத்தையோதத் தொடங்கியபோது முதலில், அரி ஓம் என – 'அரி ஓம்' என்று கூற, பொருள் ஓதுக என - பொருள் கூறக்கடவாய் என்று தேவரீர் கேட்க, ஆதாரம் உரையாத – ஆதாரம் சொல்ல முடியாது விழித்த, பிரமாவை விழ மோதி – பிரமதேவரைக் கீழே வீழ்ந்து உருளுமாறு மோதி, நாலு சிரமோடு சிகை தூளிபட தாளமிடும் – நான்கு சிரங்களுடன் சிகையானது பொடிபடுமாறு குட்டிய, இளையோனே – இளம்பூரணனே! நாறு இதழி வேணி – மணம் வீசும் கொன்றைமாலை தரித்த கூந்தலையுடையவரும், சிவரூப கலியாணி – மங்கல வடிவுடைய நித்யகல்யாணியும் ஆகிய உமாதேவியார், முதல் ஈண மகவு – முதலில் பெற்றருளிய பிள்ளையாகிய, ஆனை மகிழ் தோழ–விநாயகர் மகிழ்கின்ற தோழரே! வனமீது செறி-கானகத்தில்பொருந்திவாழ்கின்ற, ஞானகுறமாதை–ஞானசொரூபியாகிய வள்ளியம்மையாரை, தினை காவில் - தினைப் புனத்தில், மணமேவு - திருமணம் புரிந்துகொண்ட, புகழ் மயில் வீரா – புகழ் மிகுந்த மயில்மீது எழுந்தருளிவரும் வீரரே! ஓலம் இடு தாடகை – ஓலமிடுகின்ற தாடகையும், சுவாகு – சுபாகுவும், வளர் ஏழுமரம் - வளர்ந்துள்ள ஏழு மரங்களும், வாலியொடு – வாலியுடன், நீலி - துஷ்டையாகிய சாயாக்கிரஹியும், பகன் - பகாசுரனும், விராதன் – விராதனும், எழும் ஓதகடலோடு – பொங்கி எழும் ஓசையுடன் கூடிய கடலுடன், விறல் ராவண குழாம் - வலிமை மிக்க ராவணாதி யசுரர்களும், அமரில் பொடியாக – போர்க்களத்தில் மாண்டு பொடிபடுமாறு, ஓகை தழல் வாளிவிடு – உவகையுடன் நெருப்பைக் கக்குகின்ற கணைகளை விட்ட, மூரிதநு – பெருமை தங்கிய வில், நேமி – சக்கரம், வளை – சங்கம் என்னும் ஆயுதங்களைத் தாங்கிய, பாணி – திருக்கரங்களையுடையவரும், திரு மார்பன் – இலக்குமிதேவியை மார்பில் தரித்தவரும் ஆகிய, அரி கேசன் மருகா எனவே – விஷ்ணுமூர்த்தியின் மருகரே என்று, மறை ஓத – வேதங்கள் புகழ, ராமேசுர மேவு குமரா–இராமேச்சுரத்தில் எழுந்தருளியுள்ள குமாரக்கடவுளே! அமரர் பெருமாளே– தேவர்கள் போற்றும் பெருமை மிகுந்தவரே! வாலவயது ஆகி – வாலிப வயது அடைந்து, அழகு ஆகி – நன்றாக அழகு செய்துகொண்டு, மதன் ஆகி – மன்மதனைப்போல் ஆகியும், பணி வாணிபமொடு ஆடி - பற்பலவாறு ஆபரணங்களை மாறிமாறி புனைந்து அதுவே வியாபாரமாகியும், மருள் ஆடி விளையாடி – மயக்கத்தில் ஆடி வீணான ஆடல்களைச் செய்தும், விழல் வாழ்வு சதம் ஆகி – பயனில்லாத வாழ்வை உறுதியாக எண்ணியும், வலுவு ஆகி–அதனையே வலிமையாகப்பற்றி, மடகூடமொடு பொருள் தேடி – மாடகூடங்களுடன் செல்வத்தைத் தேடிச் சேகரித்து, வாசு புழுகோடு – வாசனை வீசும் புனுகுடன், மலரோடு மனமாகி – மலர்மாலைகளுடன் மனம் வைத்து, மகிழ் வாசனைகளாதி இடலாகி – மகிழ்ச்சியைத் தரும் வாசனை முதலியன அணிந்து, மயல் ஆகி – மயக்கத்தை யடைந்து, விலைமாதர்களை மேவி அவர் ஆசை தனிலே சுழல – விலைமகளிர்களை விரும்பி அவர்களுடைய மோகத்திலே சுழன்றும், சில நாள் போய் – சில நாள்கள் கழிந்து, தோல் திரைகள் ஆகி–தோல் திரைத்தும், நரை ஆகி – மயிர் நரைத்தும், குருடு ஆகி – கண்கள் ஒளி மழுங்கியும், இரு கால்கள் தடுமாறி – இரண்டு கால்களும் தடுமாற்றத்தை யடைந்தும், செவிமாறி – காதுகள் செவிடு பட்டும், பசுபாசபதி சூழ் கதிகள் மாறி – பதி பசு பாசம் என்ற முப்பொருள் உண்மைகளை அறியாது, சுகம் மாறி – சுகம் மாறுதலை யடைந்தும், தடியோடு திரியுறு நாளில் – தடியூன்றி திரிகின்ற நாளிலே, சூலை – சூலை, சொறி – சொறி, ஈளை – இழுப்பு, வலிவாதம் - வலிவாதம், நீரிழிவு – நீரிழிவு, சோகை – சோகை, களமாலை – கண்ட மாலை, சுரமோடு பிணி – காய்ச்சலுடன் கூடியநோய், தூறு இருமல் – துறுத்துக் கொண்டு வரும் இருமல் முதலிய நோய்கள், சூழுற – அடியேனைச் சூழ்ந்து போரிட, மூலகசுமாலம் என நாறி – பழமையாக அழுகிய அசுத்தப்பொருள் என்று பழிக்க நாற்றமுள்ளவனாகி, அழிவேனோ – அடியேன் வீணே அழியக் கடவேனோ?

## பொழிப்புரை

நான்கு முகங்களையுடைய பிரமதேவர்வேதத்தைஓதுவதற்குத் தொடங்கியபோது "அரி ஓம்" என்று முதலில்கூற, "அதன் பொருள் யாது? கூறுக" என்று தேவரீர் வினவ, ஆதாரம் உரையாது திகைத்த பிரமதேவரைக் கீழே விழுமாறு அறைந்து

நான்கு சிரங்களும் சிகைகளும் பொடிபடுமாறு குட்டிய இளம் பூரணரே! வாசனே வீசுகின்ற கொன்றை மாலையை முடித்த கூந்தலையுடையவரும், மங்கள வடிவினரும், நித்யகல்யாணியுமாகிய பார்வதிதேவி முதலில் பெற்றருளிய மைந்தராகிய விநாயகமூர்த்தி மகிழ்ச்சியுறுகின்ற தோழரே! கானகத்தில் வசித்திருந்த ஞானம்பிகையாகிய வள்ளியம்மையாரைத் தினைப் புனத்தில் மணந்துகொண்ட புகழ் மிக்க மயில்வீரரே! பெரிய ஓசையுடன் ஓலமிடுகின்ற தாடகை, சுபாகு, வளர்ந்த ஏழு மராமரங்கள், வாலி, சாயாக்கிரஹி, பகன், விராதன், ஒலிமிக்க கடல், வலிமையுடைய இராவணுதி அவுணர்கள் முதலியோர்கள் போரில் பொடிபட்டு மாய்ந்தொழியுமாறு உவகையுடன் கனற்பொறி சிந்துங் கணைகளை விட்ட பெருமை தங்கிய வில் சக்கரம் சங்கம் ஆகிய ஆயுதங்களை ஏந்திய திருக்கரங்களையுடையவரும், திருமகள் வாழும் திருமார்பரும் ஆகிய திருமாலின் மருகரே என்று வேதங்கள் புகழ, இராமேச்சுரத்தில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளே! தேவர்கள் போற்றும் பெருமிதமுடையவரே! வாலவயதை யடைந்து அழகு செய்து கொண்டு மன்மதனைப்போலாகி, ஆபரணங்களை மாறி மாறி புனைந்தும், மயக்கமுற்று, வீணில் ஆடல் புரிந்து, பயனில்லாத வாழ்வை நிலையுடையதாக எண்ணி அதில் வேரூன்றி நின்று, மாடம் கூடம் செல்வம் ஆகிய இவைகளைத் தேடி, புனுகு மலர்மாலை, முதலிய வாசனைப் பொருள்களை யணிந்து மன மகிழ்ந்து, மயக்கமடைந்து, விலைமாதர்களை விரும்பி அவர்கள் மீது ஆசையுடையவனுகி அலைந்தும், சிலநாள் கழிந்து, தோல் திரைத்தும், உரோமம் நரைத்தும், கண் குருடாகியும், கால்கள் இரண்டும் தடுமாறியும், செவிடுபட்டும், பதி பசு பாசம் என்ற முப்பொருள் உண்மையையறியும் அறிவு மாறியும், சுகம் கெட்டும், ஊன்றுகோலுடன் திரிகின்ற நாளிலே, சூலை, சொறி, ஈளை, வலிவாதம், நீரிழிவு, சோகை, கண்டமாலை, சுரம், தூறிருமல் முதலிய பலநோய்கள் சூழ்ந்து, பழமையாகி அழுகிய துர்க்கந்தம் போல் அடியேனுடைய உடல் நாறி அழியக் கடவேனே?

## விரிவுரை

### வாலவயதாகி அழகாகி:—

மனிதன் பதினறு ஆண்டினை எய்தியதும் அவன் தன்னை நன்கு அலங்கரித்துக்கொண்டு இங்குமங்குமாகத் திரிகின்



ருன். பதினறுவயது ஒரு பெரிய சிக்கலான காலம். அந்தப் பருவந்தான் மனிதன் எச்சரிக்கையாக இருக்கவேண்டிய காலம். பதினறு வயது வந்தவுடன் சன்மார்க்கத்தில் சென்ருலும் செல்வான்; திரும்பி துன்மார்க்கத்தில் சென்ருலும் செல்வான். அப்பருவத்தில் அவன் தலை, நிற்கின்ற நிலை, நடை, உடை, சொல் முதலியன எல்லாம் மாறுபாடு அடையும்.

"அருமழலையே மிகுந்து குதலை மொழியே புகன்று
அதிவிதமதாய் வளர்ந்து பதினறும்"

"இச்சீர் பயிற்றவய தெட்டோடு மெட்டும்வர
வாலக்குணங்கள் பயில் கோலப்பெதும்பையர்க
ளுடனுறவாகி"

"அழகுபெறு நடையடைய கிறுதுபடு மொழிபழகி
ஆவியாயவோர் தேவிமாருமாய்"

என்ற திருப்புகழ் அடிகளையும் உன்னுக.

### பணிவாணிப மொடாடி:—

பணிவாணிபம் – நகைவியாபாரம். இளமைப் பருவத்தின் தன்மையால் இது நிகழும். ஒரு ஆபரணத்தைச் செய்து அணிந்து கொள்வான். மீண்டும் சில தினங்கள் கழித்து அதனை அழித்து வேறு மாதிரியில் செய்து புனைவான். இவ்வண்ணமே மாற்றி மாற்றிச் செய்வதும் விற்பதும் வாங்குவதுமாக இருப்பான்.

### மருளாடி விளையாடி:—

பொருள் அல்லாதவற்றைப் பொருளாக எண்ணுவது மருள்; மயக்கவுணர்ச்சி. நடையல்லாதவற்றை நடையாகவும், அழகில்லாத ஒன்றை அழகியதாகவும், சுகமல்லாததனை சுகமாகவும், இகழ்ச்சியை புகழ்ச்சியாகவும் மாறுபட மயங்கி அறிவது; விளக்கைக் கனியென விட்டிற்பூச்சி நினைப்பது போலும், தூண்டில் முள்ளின் முனையிலுள்ள உணவை அமிர்தமாக மீன் நினைப்பது போலும், கானல்நீரை நீரென மான் நினைப்பதுபோலும் என்று அறிக.

பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும்
மருளானு மாணுப் பிறப்பு. —திருவள்ளுவர்.

வாழ்வு சதமாகி:—

செல்வமும், இளமையும், வாழ்வும் நிலைபேறு இல்லா தவை. தோன்றி மறைபவை. "நீர்மேற் குமிழிக்கு நிகரென்பர் யாக்கை; நில்லாது செல்வம் பார்க்கு மிடத்தந்த மின்போலு மென்பர்" "தேரில் கரியில் பரியில் திரிபவர் செல்வமெல்லாம் நீரிற்பொறியென்றறியாத பாவி நெடுநெஞ்சமே" என்பார் அருணகிரிநாதர்.

நீரிற் குமிழி இளமை, நிறை செல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை; நமரங்காள்! என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று. —குமரகுருபரர்.

மாடகூடமொடு பொருள் தேடி:—

வாழ்வுக்கு வேண்டியன என்று கருதப்படுபவை வீடு வாசல் மாடு கன்று உடை உணவு பொருள் முதலியன; இவை களைப் பலபல திசைகளிற் சென்று தேடியலைவது.

"திக்கோடு திக்குவரை மட்டோடி மிக்க பொருள்தேடி"

"சூழ் பொருள் தேடிட ஓடி வருந்திப் புதிதான
தூதொடு நான்மணி மாலைப்ரபந்தக்
கோவையுலா மடல் கூறி யழுந்தித்
தோமுறு காளையர் வாசல் தொறும்புக் கலமாரும்,
காலனை"

மாடகூடம் என்பது சந்தத்தை நோக்கி மடகூடம் என்று குறுகியது.

வாசபுழுகோடு.........சிலநாள் போய்:—

பரிமள மிகுந்த பொருள்களை யணிந்துகொண்டு, பொது மாதர்களது வலைப்பட்டு, ஆசைவயத்தனுகி, மனம்போன போக்கில் திரிந்து, இரவு பகல் என்று அறியாமல் திரிந்து சிலர் அலைவர். அதனுல் விலைமதிக்க முடியாத மாணிக்கம் போன்ற வாழ்நாள் வறிதே கழிந்துவிடுகின்றது.

"வீணே நாள் போய்விடாமல் ஆறுறு மீதில்
ஞானோபதேசம் அருள்வாயே"
—திருப்புகழ்.



தோல்திரைகளாகி......திரியுறு நாளில்:—

மன்மதனைப்போல் திரிந்த மனிதன் இப்போது தளர்ந்த வயதில் தேவாங்கு போல் காட்சி தருகின்றுன். இருண்டு பள பளவென்றிருந்த தலைமயிர் பஞ்சுக் காடாகி விடுகின்றது. மினுமினுப்பாக இருந்த சரீரம் வாழை சருகுபோல் திரைத்து விகாரமாகிவிடுகின்றது. கூர்மையான பார்வையுடைய கண் கள் ஒளிகெட்டு இருண்டுவிடுகின்றது. துள்ளித்துள்ளி நடந்த கால்கள் தள்ளாடித் தடுமாறித் தவிக்கின்றன; மேல்மாடியில் காற்றோட்டமான அறையிலே, அழகிய மஞ்சத்தின்மீது பல வகையான ஓவியங்களை அமைத்து, நிலைக் கண்ணுடிகளை வைத்து அநேக அலங்காரங்களுடன் இன்புற்று வாழ்ந்த சுகம் போய்விடுகின்றது. தெருத்திண்ணையிலே, கிழிந்தபாய், வறட்டி யும், சாம்பலும், கோலும், குடுவையும், அழுக்கேறிய கந்தல் தலையணையும், குளிருக்கென்று கட்டிய கிழிந்த கோணியுமாக கிழவர் இப்போது துன்புறுகின்றுர்.

சூலைசொறி......சூழலுற:—

முதுமைப் பருவத்தில் சூலை ஈளை இருமல் நீரிழிவு வாதம் முதலிய எல்லா நோய்களும் வந்து சூழ்ந்துகொள்ளும். முன்னே பலப்பல நண்பர்கள் சூழ்ந்திருப்பர்; இப்போது அவர்களில் ஒருவரும் நெருங்க மாட்டார்கள். அதற்கு நேராக பலப்பல பிணிகள் வந்து சூழ்ந்து உபசரிக்கும்.

கசுமாலமென நாறியுடல் அழிவேனே!:—

கசுமாலம்-அழுகியது. அழுக்கு நீர் நிறைந்த தொட்டி களில் பல அசுத்தப் பொருள்கள் கிடந்து அழுகி பொறுக்க முடியாத துர்வாடை வீசும். அதற்குக் கசுமாலம் என்று பேர். அதுபோல் இந்த உடம்பு அழுகி, நாறி, புழுத்து, சீழும் உதிர மும் வடிந்து, ஈக்களும் எறும்புகளும் மொய்த்து, அருகில் ஒருவரும் நெருங்காவண்ணம் நாறி முடிவில் அழிந்துபடும்.

அவ்வாறு அழியாமல் நல்வினைப்பயனுல் பெற்ற உடம்பை நல்வழியிற் பேணி உடம்புக்குள் உறையும் உத்தமனைக் காண முயலுதல் வேண்டும்.

நாலுமுகனுநி அரியோமெனா:—

பிரமதேவர் சிவ வழிபாட்டின் பொருட்டு திருக்கைலாய மலைக்குச் சென்றனர். ஆங்கு ஒருபுறம் இலக்கத்தொன்பான்

வீரர்கட்கு இடையில் விளங்கும் இளம்பூரணனைக் கண்டுங் காணுதவர் போல் பொய்யொழுக்கமாகச் சென்றூர். எம்பிரான் அவரை வீரவாகு தேவரை விட்டு அழைப்பித்துப் பின்வருமாறு வினவினுர்.

முருகர்:- யார் நீ?

பிரமா:- வேதன்.

முருகர்:- வேதன் நீயாகின், உனக்கு வேதம் வருமோ?

பிரமா:- வரும்.

முருகர்:- வருமேல் படி.

பிரமா வேதம் ஓதத் தொடங்கி தொடக்கத்தில் கூறும் மரபுப்படி "அரிஓம்" என்றனர்.

முருகவேள்:- "நிறுத்தும்; முதலில் கூறிய பிரணவத்தின் பொருள் யாது?" என்று வினவினுர். அயன் அப்பொருள் அறியமாட்டாருய் விழித்தனன்; வெள்கினன்; திகைத்தனன். ஓம் என்னும் மந்திரத்தை ஒரு முகமாகவுடைய எம்பெருமான் நகைத்தனன். "முதல் எழுத்திற்குப் பொருளறியாத மூடனுகிய நீ சிருட்டித் தொழில் செய்வது எவ்வாறு பொருந்தும்? உன் அகந்தை யிருந்தவாறுதான் என்னே?" என்று கூறி, நான்கு தலைகளிலும் பன்னிரு கரங்களால் நன்கு குட்டி யருளினுர்.

"படைப்போன்
அகந்தை யுரைப்ப மறை யாதியெழுத் தென்
றுகந்த பிரணவத்தின் உண்மை—புகன்றிலையால்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ங னென்றுமுனங்
குட்டிச் சிறையிருத்துங் கோமானே" —கந்தர்கலிவெண்பா.

"வேதனுகிய மறையோ னெடு வீனை
யாடியே குடுமியிலே கரமொடு
வீறமோதின மறவா"

"அரனுக்குற்றது புகல்வோனே
அயனைக் குட்டிய பெருமாளே" —திருப்புகழ்

"சிகை தூளிபட" என்றதனையும் நோக்குக. சிகை துகள்படுமாறல் அந்தக் குட்டு எத்துணை வேகமாக விழுந்திருக்கும் என்பதனை உய்த்துணர்க.



குட்டினுர் என்று கூருமல் "தாளமிடும் இளையோனே" என்று நயமாகக் கூறுவார்; ஏன்? குட்டுப் பட்டவர் மூவரில் ஒருவர்; படைப்புத்தொழில் புரிபவர். பெரிய மனிதர் குற்றம் புரிந்து தண்டனை யடைந்தாலும் கீழுள்ளவர் அதனை நேர்முகமாகக் கூருமல் மறைமுகமாகக் கூறுவது இன்றைக்கும் உள்ள உலகியற்கை. ஆதலின், "தாள மிடும்" என்று அழகாக உரைக்கின்றூர்.

ஞான குறமாது:—

வள்ளியம்மை ஞானம்பிகை. அத் தாய் புரிந்தது மெய்ஞ் ஞானப்பயிர். ஞானத்தை ஞானபண்டிதன் விரும்புவான்.

"சுந்தரஞான மென்குறமாது
தன் திருமார்பி லணைவோனே"

என்பார் பிறிதொரு திருப்புகழிலே.

ஓலமிடு தாடகை......அரிகேசன்:—

ஸ்ரீராமாவதாரத்தின் பெருமையை மிக நன்ருக இதில் விளக்குகின்றனர். திருமால் மருகன் என்று மறை புகழ்கின்றது என்றனர்.

இராமேச்சுரம்:—

ஸ்ரீராமர் ராவணனை வதைத்துத் திரும்பியபோது, சிவலிங்கத்தை நிறுவி வழிபட்ட புனிதமான திருத்தலம்.

## கருத்துரை

அயனைச்சிறைசெய்த ஆண்டவரே! ஆனைமுகக் கடவுளின் துணைவரே! வள்ளிமணுளரே! திருமால் மருகரே! இராமேசுரம் மேவிய இறைவரே! அவமே என்உடல் அழியாமல் அருள்புரிவீர்.

உ

ஓம் குஹாய நம

# கந்தரலங்காரம்

(சகூ-வது பக்கத் தொடர்ச்சி)

சூலம் பிடித்தெம பாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்
காலன் றனக்கோரு காலுமஞ் சேன்கடல் மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான் குமார னறுமுகவன்
வேலுந் திருக்கையு முண்டே நமக்கோரு மெய்த்துணையே. (6)

பதவுரை

கடல்மீது எழுந்த — சமுத்திரத்தில் உண்டாகிய, ஆலம் குடித்த பெருமான் குமாரன் — ஆலாலவிடத்தையுண்ட சிவபெருமானுடைய திருக்குமாரராகிய, அறுமுகவன் — ஆறுமுகப் பெருமானுடைய, வேலும் — வேலாயுதமும், திருக்கையும் — திருக்கரமும், ஒருமெய்த் துணை நமக்கு உண்டு — ஒப்பற்ற உண்மைத்துணையாக நமக்கு உள்ளன; ஆதலால், சூலம் பிடித்து — சூலாயுதத்தைக் கையிற்பிடித்துக் கொண்டும், எமபாசம் சுழற்றி — இயமனுடைய பாசத்தைச் சுழற்றிக்கொண்டும், தொடர்ந்து வரும் — உயிர்களைத் தொடர்ந்து வருகின்ற, காலன் தனக்கு — காலன் என்பானுக்கு, ஒருகாலும் அஞ்சேன் — அடியேன் ஒருபோதும் அஞ்சமாட்டேன்.

## விரிவுரை.

சூலம் பிடித்து:—

இயமனுடைய கையில் இருப்பது சூலம். அது அவனுக்கு சிவபெருமானால் தரப்பெற்றது. மிகவும் சிறந்த ஆயுதம்.

எம பாசம்.—

பாசம் என்பது ஆன்மாக்களைக் கட்டிப்பிடிக்கும் ஒரு ஆயுதம். அது இயமனுடைய கையில் இருப்பது. யமன் - அடக்குபவன்.

காலன்:—

காலன் என்பவன் இயமனுடைய மந்திரி. அவன் ஆயுள் முடிந்த காலமறிந்து உயிர்களைப் பற்றவருவான். அதனால் காலன் எனப்பட்டான்.

ஒருகாலு மஞ்சேன்:—

முருகப்பெருமானுடைய அடியார்கள் இயமனுக்கும் அவனுடைய அமைச்சனாகிய காலனுக்கும் ஒரு சிறிதும் அஞ்சமாட்டார்கள். காலன் அவர்கள்பால் அணுகமாட்டான்.



"வாராதகலந்தகா வந்தபோதுயிர் வாங்குவனே"
"என்பாலாயுதம் வருமோ எமனோடு பகைக்கினுமே"
"காலன் வெம்பி வந்திப் பொழுதென்னை யென் செய்யலாம்"

என்று அடிகள் பற்பல இடங்களிற் கூறுகின்றனர்.

மறலியை யுதைத்த மணிகண்டருடைய குமாரராகிய முருகவேளைத் தொழுது அடிமைப்பட்டவர்கட்கு எமபயம் ஏது?

குமரா சரணம் சரணமென் றண்டர் குழாந்துதிக்கும்
அமரா வதியிற் பெருமாள் திருமுகம் ஆறுங்கண்ட
தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே.

கடல்மீதெழுந்த ஆலங்குடித்த பெருமான் குமாரன்:—

தேவர்கள் தாம்என்றும் இறவாமலிருக்கும்பொருட்டுதிருப் பாற்கடலைக் கடைந்தனர். விநாயக வணக்கம் புரியாமையால் ஆலாலவிடந் தோன்றியது. அதனைக் கண்ட அமரர்கள் அனைவரும் அஞ்சி ஓடி சிவபிரானிடம் அடைக்கலம் புகுந்தார்கள். பரமேச்சுரர் அவ் விடத்தைத் தமது கண்டத்தில் தரித்து எல்லாருடைய கண்டங்களையுந் தவிர்த்தனர். அவருடைய திருக்குமாரராகிய முருகவேள் நமக்கு வரும் இயமனுடைய கண்டத்தைத் தவிர்ப்பார்.

அறுமுகவன்:—

ஆறுதிருமுகங்களும் ஆறு குணங்கள் என்ப. "ஏவர்தம் பாலுமின்றி எல்லைதீர் அமலற்குள்ள மூவிருகுணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்ததென்ன" என்பார் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள். ஆறு சமயங்கட்கும் தலைவர் என்பதும், ஆறு ஆதாரங்களில் அமைந்தவர் என்பதும், ஆறு அத்துவாக்களுக்கு அதிபர் என்பதும், ஆறு சத்திகளாக அமைந்தவை என்பதும் அதனால் விளங்குகின்றன.

வேலுந் திருக்கையுமுண்டே நமக்கோரு மெய்த்துணையே:—

உண்மையான துணையாக விளங்குவன, வேலாயுதமும், அவ்வேலை ஏவுகின்ற திருக்கரமும் என்ப. ஏனையவை துணைபோல் காணப்படுவனவே. காலபாசம் வரும்போது யாரே துணை செய்யவல்லார்?

"வெம்புமுயிருக் கோருறவாய் வேளை நமனும் வருவானேல்
தம்பி தமையன் துணையாமோ தனையர் மனைவி வருவாரோ"

என்பார் அருட்பிரகாச வள்ளலார்.

ஐவருங் கைவிட்டு மெய்விட்டு ஆன்மா புறப்பட்டுச் செல்லும் போது ஒருவரும் உடன் தொடர்ந்து வரமாட்டார். அவ்வழிக்கே தனிவழி என்று பேர். அத் தனி வழியில்வந்து இடத்

உ
முருகா

# பெரியபுராணம்

## எறிபத்த நாயனர் புராணம்

"இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க் கடியேன்"

அநபாயரது திருக்குலமாகிய சோழ மன்னர்களது தலை நகரங்களில் ஒன்று கருவூர். ஆழ்ந்த அகழிகளும் உயர்ந்த மதில்களும் சோலைகளும் சூழ்ந்து மாடமாளிகைகளும் மணிமண்டபங்களும் நிறைந்து விளங்குவது அத் திருநகர். முனிவர் பலர் ஆமிர (மாமர) வடிவாகி இருகரையிலும் தவஞ்செய்த காரணத்தால் ஆம்பிராவதி என்று பேர் பெற்ற சிறந்த நதியினுல் சூழப்பெற்றது.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவருக்குப் பசுபதீச்சுரர் என்று திருநாமம். அத்திருக்கோயிலுக்கு ஆனிலை எனப்படும். காமதேனு வழிபட்டு வரம் பெற்ற காரணத்தால் இப்பேர் பெற்றது. இத் திருக்கோயிலில் கருணைக்கடலாக எழுந்தருளிய பசுபதீசரை எப்போதும் வழிபட்டுக்கொண்டு, சிவனடியார்க்கு எல்லையில்லாத அன்புடன் தொண்டுபுரிபவர் எறிபத்தநாயனர்.

சைவம் உலகில் ஓங்குமாறு, சிவனடியார்கட்கு அடுக்கத்தகாத இடர்கள் வந்த காலத்தில் குகையினின்றும் புறப்பட்ட சிங்கம்போல் தோன்றி, அந்த இடர் நீங்க வேதங்கள் பரவும் பரசு ஆயுதத்தால் எறிந்து உதவிபுரிவார். இவ்வாறு அடியார்க்கு இடர் எய்திய தருணந்தோறும் சமயசஞ்சீவியாக எய்தி உற்றிடத்து உதவும் திருத்தொண்டினை முட்டாது புரிந்து வந்தார்.

---

தும் வலத்தும் முன்னும் பின்னும் இரவும் பகலும் துணை செய்யவல்லது எம்பிரானுடைய வேலாயுதமாகும்.

"தனித்து வழி நடக்குமென திடத்து மொரு வலத்துமிரு
புறத்து மரு கடுத்திரவு பகற்றுணை யதாகும்
... ... ... குகன் வேலே" —வேல்வகுப்பு.

### கருத்துரை

சிவகுமாரராகிய செவ்வேட் பரமனது வேலாயுதமும் அவரது திருக்காமும் அடியேனுக்கு உண்மையான துணையாக இருப்பதால் சூலமும் பாசமும் ஏந்திவரும் காலனுக்கு ஒரு சிறிதும் அஞ்சமாட்டேன்.

கந்தரலங்காரம் மூலமும் உரையும் முற்றுப்பெற்றது.



மழைவளர் உலகில் எங்கும் மன்னிய சைவ மோங்க
அழலவிர் சடையான் அன்பர்க் கடாதன அடுத்த போது
முழையரி யென்னத் தோன்றி முரண்கெட எறிந்து தீர்க்கும்
பழமறை பரசுந் தூய பரசுமுன் னெடுக்கப் பெற்றார்.

அக்காலையில் கருவூர் என்னும் அத்தலத்தில் சிவகாமியாண்டார் என்னும் முனிவர் ஒருவர் இருந்தார். அவர் பசுபதீச்சுரருக்கு மலர்த்தொண்டு மனமகிழ்ச்சியுடன் புரியும் நியமம் பூண்டிருந்தார். நாடோறும் வைகறையில் எழுந்து நீராடுவார். வாயை ஒரு துண்டினால் கட்டிக்கொண்டு திருநந்தவனத்திற்குச் செல்வார்; நெஞ்சால் ஐந்தெழுத்தை உச்சரித்துக்கொண்டே நறுமணங் கமழும் மலர்களை மலருந்தருணத்தில் கொய்துக்கொண்டு சென்று திருமாலையாகக் கட்டி அப் பூங்கூடையை ஒருதோளில் தாங்கி உயர்த்திக்கொண்டுசென்று திருக்கோயிலில் காலந்தோறும் ஆலமுண்ட அரனுருக்குப் புனைவிப்பார். இத்தகைய அரும் பெருந் தொண்டினை அகமகிழ்ந்து தவருவல் நியதியுடன் புரிந்து வருவார்.

புரட்டாசித் திங்கள் மகாநவமி விழா ஊரெங்கும் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. அன்று நவமிக்கு முன்னாள்; அஷ்டமி. சிவகாமியாண்டார் வழக்கம்போல் அதிகாலையில் நீராடி திருநீறும் கண்டிகையும் புனைந்து திருநந்தவனத்தில் விருப்புடன் மொட்டரு மலர் பறித்து திருப்பள்ளித் தாமமாக அமைத்துக் கொண்டு, தண்டில் அக்கூடையைத் தொங்கவிட்டு, இறைவருக்குத் தரும்பொருட்டு சாலையில் திருக்கோயிலை நோக்கி விரைந்து செல்கின்றார்.

கருவூரை யாளுகின்ற புகழ்ச்சோழருடைய பட்டவர்த்தனம் என்னும் சிறந்த யானை ஆம்பிராவதியில் நீராடி, மிகுந்த களிப்புடன் மதங்கொண்டு வருகின்றது. அதன்மீது இரு பாகர் இருந்தனர். அந்த யானைக்குப் பக்கங்களிலும் முன்னுமாகச் செலுத்துகின்ற பரிகோற்காரர் மூவர். மலைபோன்ற அந்த யானை மிக்க வேகமாக வருவதைக் கண்டோர் அஞ்சி ஓடினர்கள். யானை ஒரு தெரு வழியாகச் சென்று முட்டி, முன்னே செல்லுகின்ற சிவகாமியாண்டாரை பின்தொடர்ந்து ஓடிச் சென்று பிடித்து அவருடைய திருத்தோள்மீது தண்டில் தொங்கவிட்டிருந்த பூக்கூடையைத் தும்பிக்கையால் பறித்து மண்ணில் சிந்தியது. அதுகண்ட பாகர் சண்டமாருதம்போல் விரைந்து செல்லும் யானையை விரைந்து வேறொரு புறமாகச் செலுத்திக்கொண்டு சென்றனர். சிவகாமி யாண்டார் தமது திருத்தொண்டிற்குத் தடை நேர்ந்தது குறித்துப் பெரிதும் வருந்தினர். பதைபதைத்தார். சீறினர். மதங்கொண்ட யானையைத் தண்டுகொண்டு அடிக்கச் சென்றார். யானை விரைந்து சென்றபடியால் தளர்ந்த வயதுடைய அம் முனிவர் அதை நெருங்க முடியாது தவித்தார். மண்மிசை வீழ்ந்தார்.

கையால் நிலத்தை அறைந்தார். துன்பக் கடலில் முழுகினர். "சிவதா சிவதா" என்று கூறி சிவபெருமானைத் துதிப்பார்.

களியா னையினீர் உரியாய் சிவதா
எளியார் வலியாம் இறைவா சிவதா
அளியா ரடியார் அறிவே சிவதா
தெளிவா ரமுதே சிவதா சிவதா.

ஆறும் மதியும் அணியுஞ் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந்துவதோ
வேறுண் ணினைவார் புரம் வெந்தவியச்
சீறுஞ் சிலையாய் சிவதா சிவதா.

தஞ்சே சரணம் புகுதுந் தமியோர்
நெஞ்சே துயரங் கெட நேர்தொடரும்
மஞ்சே யெனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ் சேவடியாய் சிவதா சிவதா.

"யானையை உரித்து அதன் தோலைப் போர்த்துக்கொண்ட எம்பெருமானே! எளியவர்க்கு உற்ற துணையாக நின்று ஆட்கொள்ளும் இறைவரே! அன்புடைய அடியவர் கருதும் ஞானப் பொருளே! கங்கா நதியும் பிறைமதியும் விளங்கும் தேவரீருடைய திருமுடியில் புனைவதற்கு உரியதாகக்கொணர்ந்த இம்மலரை யானை சிந்துவதோ? திரிபுரத்தை நகையினால் எரித்த விரிசடை விமலா! அடியேனுடைய திருத்தொண்டுக்கு இப் பெரிய இடர் விளைந்ததே! தேவதேவா! கருணாநிதி! இந்த வேளையில் உமது திருவடியே அடைக்கலம். அடைக்கலம் புகுந்த மார்க்கண்டேயருக்காக சிறிது சேவடிக் கொழுந்தால் தீண்டி மறலியை யுதைத்த மாதேவா! காமனைக் காய்ந்த கண்ணுதற் கடவுளே! அந்தோ! வைகறை எழுந்து நீராடி அருமையினும் அருமையாக எடுத்த இத்தனை மலர்களும் மண்ணில்சிதறிபயனற்றனவாயினவே; என்செய்வேன்? எந்தையே! கந்தவேளை யீன்ற கருணாகரா! இந்தவேளை யாட்கொள்வீர்" என்று முறையிட்டார்.

இவ்வாறு சிவகாமியாண்டார் இறைவனைக் குறித்து முறையிடும்போது எறிபத்த நாயனார் அங்கு வந்தார். வந்தவர் அடியவர் முறையைக் கேட்டு நெருப்புயிர்த்து சினம் மூண்டு கொதிப்புற்றனர். "எம்பிரானடியார்க்கு என்றும் வழிப்பகை யானையே யன்றோ? அதனைக் கொன்று வீழ்த்துவேன்" என்று கூறி கொலை மழுவை ஏந்தி எய்தினர். சிவகாமியாண்டாரை வணங்கி, "சுவாமீ! இந்தப் பெரிய இடர் புரிந்த யானை எங்கு சென்றது?" என்று வினவினர். சிவகாமியாண்டார் "ஐயனே! அடியேன் முடியா முதலாகிய முக்கட்பெருமான் முடிமேல் சாத்துதற்குக் கொணர்ந்த கடியார் மலர்களைப் பொல்லாத யானை படிமேல் சிந்தி இத்தெருவழியே சென்றது" என்றார்.



எறிபத்தர் "அடிகாள்! தாங்கள் வருந்த வேண்டா. இனி அந்த யானை பிழைப்பது எங்கே? இப்போது அதனைக் கொல்வேன்" என்று கூறி நெருப்புப் பொரி பறக்கும் மழுவாயுதத்தை ஏந்திக்கொண்டு, காற்றும் நெருப்புங் கலந்து பொங்கி எழுந்ததுபோல், மிகுந்த விசையுடன் சென்றார். யானைமீது சீறிச் செல்லும் சிங்கம்போன்றிருந்தது அக்காட்சி.

மதங்கொண்டு செல்லும் பட்டவர்த்தனம் என்ற அந்த அரச யானையைக் கண்டார். "இது முன் எம்பிரான் உரித்த யானையே போலும்" என்று ஐயுற்றார். "விண்ணவரும் மண்ணவரும் வந்து தடுத்தாலும், யான் அஞ்சாது எதிர்த்து இந்த வாரணத்தைக் கொல்லுவேன்" என்று வீரவசனம் புகன்றார். மழுவாயுதத்தை வலமாகச் சுற்றி ஆர்த்தார்; ஓரே பாய்ச்சலாகப் பாய்ந்தார். யானை மிகுந்த கோபத்துடன் கண்களில் நெருப்புப் பொரி சிந்த நாயனாரை எதிர்த்துப் பாய்ந்தது. அப் பெரிய மலைபோன்ற யானையைக்கண்டு நாயனார் அஞ்சினாரில்லை. தாய் புரியுந் தலையன்புக்கு முன் அச்சந் தலைப்படாதன்றோ? மிகுந்த ஆற்றலுடன் எறிபத்தர் யானையை எதிர்த்து பூக்கூடையைச் சிதறிய அதன் தும்பிக்கையை மழுவினால் துண்டித்தார். துதிக்கை துணிபட்டதும் யானை கதறி பூமிமேல் வீழ்ந்து புரண்டது. பாகர் இருவரையும், இருபக்கங்களிலும் முன்னுமாக யானையைச் செலுத்தி வந்த குத்துகோற் பாகர் மூவரையும் கொன்று வீழ்த்தினர்.

ஐம்புலன்களையும் ஆணவ மலத்தையும் வென்ற எறிபத்த நாயனார் பாகர் ஐவர்களையும் யானையையும் கொன்று வீரத்துடன் நின்றார். அதைக்கண்ட மற்றவர் ஓடி புகழ்ச் சோழருடைய அரண்மனை வாயில் காவலரிடம், "பட்டவர்த்தனமும் பாகரும் கொலையுண்டார் என்று கொற்றவன்பால் கூறும்" என்றார். காவலர் உள்சென்று பார்த்திபனைப் பணிந்து, "பற்றலரில்லாக் கொற்றவ! தேவரீருடைய பட்டவர்த்தனம் என்ற யானையை சிலர் கொன்றனர்" என்று பாகர் வந்து கூறினார்கள்" என்றார்.

புகழ்ச்சோழர் பொருக்கென எழுந்தார். சீற்றம் பொங்கியெழுந்தது. அவருடைய திருமார்பில் உள்ள மாலையில் மொய்த்திருந்தவண்டுகள் எழுந்தன. சினம் மிகுதியாக எழுந்த படியால் "யார் செய்தார்?" என்று கேட்டாரில்லை. இளஞ் சிங்கம்போல் வீறுகொண்டு மன்னர் மணிவாயிலைக் கடந்தார். சேனைத் தலைவர்கள் அரசரது எழுச்சியைக் கண்டு, சேனைகளைப் புறப்படுமாறு பறையறைந்தார்கள். வானை மறைத்த கொடிகளுடன் கூடிய எந்திரத் தேர்களும், யானைகளும், குதிரைகளும் புறப்பட்டன. வீரர்கள் வில், வாள், தண்டு, பிண்டி, பாலம், முசலம், சக்கரம், மழு, சூலம் முதலிய பலபடைகளை யேந்திக்கொண்டு கடல்போல் புறப்பட்டனர். சங்கம், தாரை, காளம், பேரிகை,

ப்பை, கண்டா, உடுக்கை, திமிலை முதலிய பல்லியங்கள் முழங்கின. தேர்ச்சக்கரங்களின் ஒலியும் யானையின் முழக்கமும் குதிரைகளின் கழுத்தின் மணியும் வீரர்களதுஆர்ப்பும் சேர்ந்து உகாந்த காலத்தில் பொங்கும் கடல் ஒலி நாணப் பயங்கரமாக முழங்கின.

வீரக்கழலணிந்த வேந்தர்பெருமான் ஒரு சிறந்த புரவியின் மீது ஏறிக்கொண்டு நால்வகைப் படைகளும் தொடர அரசமாவீதியை யடைந்தார். பாகரும் பட்டத்து யானையும் மாண்டு கிடக்கும் இடத்தைச் சேர்ந்தார். அங்கு பகைவர் ஒருவரையுங் கண்டாரில்லை. ஒளிமிக்க மழுவை யேந்தி இரு கரங்களுடன் நிமிர்ந்து யானைபோல் நின்ற அன்பரைக் கண்டார்.

உதிரக்குழம்பில் மலைபோல் புரளும் யானையின் முன் நின்ற எறிபத்தநாயனர் மன்றுளாடும் மணிகண்டருடைய அடியார். ஆதலால் அவர் கொன்றிருக்க மாட்டார் என்று கருதிய மன்னர் "யார் இந்த யானையையும் பாகரையும் கொன்றது?" என்று வெடிபட உரத்துக் கேட்டார். பாகர் பார்த்திபனைப் பணிந்து "வெற்றி மாலையணிந்த வேந்தே! தேவரீருடைய வலிமைமிக்க களிற்றுக்குமுன் எதிர்த்து நிற்க வல்ல மன்னவர் யாருளர்? எவ்விடத்தும் இல்லை. இத் தீங்கினைச் செய்தவர் இதோ பரசு தாங்கி நிற்கும் இவரே யாவார்" என்று கூறினர். அதுகேட்ட அரசர், "சங்கவெண் குழையணிந்த சங்கரனுடைய அடியவராகிய சற்குணசீலர் இவர்; பிழைகண்டிலரன்றிக் கொல்லமாட்டார். அணுத்துணையும் அறநெறி கடவார். ஆதலின் யானையும் பாகரும் தவறுசெய்திருக்கவேண்டும்" என்று எண்ணி சேனைகளை விலக்கி, தானும் புரவியினின்றும் இறங்கினர்.

"கரிய பெரிய மலைபோன்ற மதயானைக்கு எதிரே இம் மெய்த்தவசீலர் சென்றபோது நன்மைக்குமாறாக வேறு ஒன்றும் நிகழாமையால் நான் தவமுடையேன்; எம்பிரானுடைய அடியார் இவ்வளவு முனிவுகொள்ளுமாறு என்ன பெரும்பிழை நேர்ந்ததோ? அந்தோ! கெட்டேன்" என்று மன்னர் மிகவும் அஞ்சினர்.

மைத்தடங் குன்று போலு மதக்களிற் றெதிரே யிந்த
மெய்த்தவர் சென்ற போது வேறொன் றும் புகுதா விட்ட
அத்தவ முடையே னானேன் அம்பல வாண ரன்பர்
இத்தனை முனியக் கெட்டேன் என்கொலோ பிழையென் றஞ்சி.

அன்பின் வடிவாகிய அரசர் தமது அருகில் நெருங்கி நின்றவர்களை விலகிநிற்கச்செய்து, அன்பராகிய எறிபத்த நாயனர் திருமுன் சென்று, "அடிகாள்! இதனை அடியேன் அறிந்திலேன்; அங்கு கேள்விப்பட்டது ஒன்று. அதுநிற்க, இந்த யானையால் நேர்ந்த பிழைக்குப் பாகர்களுடன் இதனைக்கொன்ற தண்டனையே போதுமோ? மேற்கொண்டு செய்யக்கடவது உண்டோ? உத்தரவாகவேண்டும்" என்று பயபக்தியுடன் கேட்டார்.



செறிந்தவர் தம்மை நீக்கி அன்பர்முன் தொழுது சென்றீ
தறிந்திலேன் அடியேன் அங்குக் கேட்டதொன் றதுதா னிற்க
மறிந்தவிக் களிற்றின் குற்றம் பாகரோ டிதனை மாள
எறிந்ததே போது மோதான் அருள்செயும் என்று நின்றார்.

புகழ்ச்சோழரை நோக்கி எறிபத்தர் கூறுவார்; "சோழ மன்னரே! சிவகாமியாண்டார் நாகாபரணமணிந்த ஏகநாயகருக்குச் சாத்தும்பொருட்டு கொண்டுவந்த திருப்பள்ளித் தாமத்தை இந்த யானை பறித்துச் சிந்தியது. அதனால் இதனைத் துணித்து வீழ்த்தினேன். யானை சிவ அபராதஞ் செய்யும்போது மேலிருந்த பாகரும் கீழிருந்த பரிக்காரரும் விலக்கிடாதிருந்த காரணத்தால் அவர்கள் மழுவினலை மாய்ந்தொழிந்தார்கள். இது இங்கு நிகழ்ந்தது" என்றார். புகழ்ச்சோழநாயனர் அதனைக் கேட்டு! "அடிகேள்! இத்துணைப்பெரிய அபசாரத்திற்கு இந்தத் தண்டனை போதாது; குற்றஞ்செய்த யானையையும் விலக்காதிருந்த ஏவலரையும் வைத்திருந்த குற்றத்திற்காக அடியேனையுங் கொலல வேண்டும். ஆனல் தேவரீருடைய திருக்கரத்தில் உள்ள மங்கல மழுவினல் கொல்லுந்தகுதி அடியேன் பால் இல்லை; இந்த வாளினல் சிறியேனைக் கொன்று என்னை இப்பாவத்தினின்றும் தீர்வு பெறுமாறுசெய்யும்" என்றுகூறி தமது உடைவாளை எடுத்து நீட்டினர்

அங்கண ரடியார் தம்மைச் செய்தவிவ் வபரா தத்துக்
கிங்கிது தன்றாற் போதா தென்னையுங் கொல்ல வேண்டும்
மங்கல மழுவால் கொல்கை வழக்குமன் றிதுவா மென்று
செங்கையால் உடைவாள் வாங்கிக் கொடுத்தனர் தீர்வு நேர்வார்.

அரசருடைய பணிவையும் அவருடைய அரும்பெருங் குணங்களையும், எறிபத்தர் நோக்கினர். "ஆ! இவருடைய அன்புக்கு அளவில்லை பட்டத்து யானையும் பாகரும் மாண்டது போதாதென்று தன்னையும் கொல்லுமாறு வேண்டுகின்றார். அந்தோ! கெட்டேன். இப்போது இந்தவாளை நான் வாங்காதிருப்பனேல் இவர் தன்னைத்தானே இவ்வாளினல் மாய்த்துக் கொள்வார்" என்று அஞ்சி அவ் வாளை வாங்கிக் கொண்டார். அரசர் வாளினலை இறவாமல் உய்வு பெறும் பொருட்டே எறிபத்தர் வாளை வாங்கினர். ஆனல் அரசர் அவர் கருத்தை யறியவில்லை. தன்னைக் கொன்று அப்பிழையினின்றும் நீக்கி யாட்கொள்ளும்பொருட்டே வாங்கினர் என்று எண்ணினர்.

புகழ்ச்சோழர் தொழுதுநின்று, "அடியேன் என்ன தவஞ் செய்தேனே? இப்பெருந்தொண்டர் வாளால் என்னைக்கொன்று

என்பிழையைத் தீர்த்து உதவிசெய்யப் பெற்றேன்'' என்று பெரிதும் மகிழ்ச்சியடைந்தார். எறிபத்தர் அத் திரத்தை நோக்கி முன்னிலும் விம்மிதரானார். ''யானையும் பாகரும் மாண்டதுடன் தானும் மாளவேண்டும் என்று வாளைத் தந்து பெருமகிழ்ச்சி யடையும் இந்த எல்லை யில்லாத அன்பனுருக்குத் தீங்கு நினைத்தேனே'' என்று எண்ணினார். அன்றியும் தன்னுயிரை நீக்கவும் கருதி, அவ் வாளினால் தன் கழுத்தினை யரிய முயன்றார். அதுகண்ட அரசர்பெருமான் பெரிதும் அஞ்சினார். இப்பெரியார் செய்கை இருந்தவாறு இது என்னே! கெட்டேன் என்று கடிதிற்சென்று எறிபத்தர் கையி லிருந்த வாளையுங் கையையும் பிடித்துக்கொண்டார். மன்னர் விடாதுபற்ற மாதவராகிய எறிபத்தர் மிகவும் வருந்திநின்றார். அளவில்லாத அன்பினால் வந்த அந்த இடரை அகற்றும் பொருட்டு உற்றவிடத்து உதவும் பற்றிலாப்பரமன் திருவருளால் வானில் ஒரு இனிய அருள்வாக்கு பிறந்தது.

''உலகமெல்லாம் போற்றுந் தகைமையுடன்கூடிய அன்பு மிகுந்த ஆர்வலரீர்! திருத்தொண்டின் பெருமையை உலகிற்கு உணர்த்தும்பொருட்டு புனிதமாகிய மலரை யானை சிந்துமாறு சிவபெருமான் அருள் கூட்டியது'' என்று வானொலி யெழுந்தது. அவ்வொலி எழுந்ததும் யானையும் எழுந்தது; பாகரும் எழுந்தனர். தமதுகழுத்தில் பூட்டிய வாளை விட்டு எறிபத்த நாயனார் புகழ்ச்சோழருடைய திருவடிமேல் வீழ்ந்தனர். வேந்தர் பெருமானும் வாளாயுதத்தை எறிந்துவிட்டு, எறிபத்தர் பாத மலர்மீது வீழ்ந்தார், தேவர்கள் பூமழை பொழிந்தனர்.

ஈரவே பூட்டும்வாள்விட் டெறிபத்தர் தாமும் அந்த
நேரியர் பெருமான் தாள்மேல் விழுந்தனர் நிருபர் கோனும்
போர்வடி வாளைப் போக எறிந்தவர் கழல்கள் போற்றிப்
பார்மிசைப் பணிந்தான் விண்ணோர் பனிமலர் மாரி தூர்த்தார்.

இருவரும் எழுந்து வானத்தில் எழுந்த அருள்நாத ஒலியைப் போற்றி நின்றனர். பூங்கூடையுள் மலர் முன்போல் நிரம்புமாறு, மறைபுகழ் இறைவர் திருவருள் புரிந்தார். அந்தத் திருவருட்செயலை சிவகாமியாண்டார் கண்டு பெரிதும் மகிழ்ச்சியுற்றார். உறங்கி எழுந்ததுபோல் எழுந்த யானையைப் பாகர் மன்னர்பெருமான்முன் நிறுத்தி வணங்கினார்கள். எறிபத்த நாயனார் சோழரை நோக்கி, ''பெருமானே! அடியேன் மகிழுமாறு இந்த பெருமை தங்கிய யானைமீது ஏறி அரண்மனைக்கு எழுந்தருள்வீர்'' என்று வேண்டினார். அடியவர்ஆணையை மறுக்க அஞ்சி புரவிமேல்வந்த புரவலர் யானைமீது ஏறினார். ஏழுகடலும் ஒருங்கே ஒலித்தது போல் சேனைகள் ஆர்த்தன. மண்ணுளார் மகிழ்ந்து வாழ்த்தினர். விண்ணுளார் வியந்து போற்றினர். புகழ்ச்சோழர் பொன்னம்பலத்தில் ஆடிய சேவடியைச் சென்னியில் சூடி அரண்மனைக்குச் சேர்ந்தார்.



# கற்பு

## தையல்நாயகி

(௬௩-வது பக்கத்தொடர்ச்சி)

தையல்நாயகி கொலைக்கூடத்தில் இரு கொலைஞருக்கு நடுவே நிற்கின்றாள். இரண்டு புலிகளுக்கு இடையே நிற்கும் இளம்பெண் மான்போல் நடுங்கி நின்றாள். தன்விதியை நினைந்து மனம்நொந்தாள்.

''முருகா! கருணாநிதீ! ஒரு குற்றமும் செய்யாத எனக்கு இப்பெரிய துன்பம் வந்து நேர்ந்ததே. மனத்தாலும் நான் பிழைபட்டதில்லையே. வள்ளிமணாளா! பெண்ணாய்ப்பிறத்தலே பெருந்துன்பம். அதிலும் இரண்டாந் தாரமாக மணந்துகொள்ளுதல் மிகப் பெருந்துன்பம். என் ஆவி பிரிவது பற்றியும் நான் வருந்தவில்லை. வீண்பழி என்மீது ஏற்பட்டதே. நான் மாண்ட பின்னும் பழிச்சொல் மாறுது நிற்குமே! பெற்றோர்க்கும் வசை; புகழ்பெறப் பெற்ற என்னால் இகழ்பெற்று இடர்படுவரே. அந்தோ! என் படுக்கையறையில் அயலவன் பாதுகை எவ்வாறு வரும்? என்னை அடியுடன் கெடுக்க எண்ணிய மூத்தாளது சூழ்ச்சியாகவே இருக்கும். முருகா! என்னை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்ற மாட்டாயா? முருகம்மையாரைக் கணவன் வெட்டிய கரமும் வரமும் கொடுத்து காப்பாற்றினீரே! தெய்வப் புலமை தங்கிய ஒளவையாருக்கு அருள் புரிந்தீரே! மூவர் முதல்வா! கர்ப்பிணியாகிய இந்த அபலையைக் காப்பாற்று! ஆறுமுகம் படைத்த அண்ணலே! தேவர் துயர் கெடுத்த தெய்வமே! கருணைக்கடலே!'' என்று கல்லுங் கரையுமாறு கண்ணீர் சொரிந்து துதித்து நின்றாள்.

கற்பின் செல்வியாகிய அம் மாதரசியின் துன்பத்தையும், அவள் திருவாக்கிலிருந்து வந்த துதியையும், கொலைஞர்கள் கேட்டு மனம் உருகினார்கள். கல்லும் உருகும் என்றால் அவர்கள் மனம் உருகுவது என்ன அதிசயம்? ஒரு கொலைஞன் மற்றொரு கொலைஞனை நோக்கி, ''அடே அண்ணே! இதுபெரிய பாவமடா! பெண்கொலை மகாபாவம்.

---

சிவகாமியாண்டார் தமது மலர்த் தொண்டினைச் செய்யும் பொருட்டு பூக்கூடையுடன் திருக்கோயிக்குச் சென்றார். எறிபத்தநாயனார், ''என்னே! சிவனடியார் திருத்தொண்டர்கள் அறிவதற்கரியார்'' என்று எண்ணி எண்ணி அற்புதமடைந்தும், சோழருடைய அன்பின் பெருக்கை உன்னிஉன்னி உள்ளம் உவந்தும், தமது திருப்பணியை நோக்கிச் சென்றார்.

இவ்வாறு எறிபத்தநாயனார் அடியார்க்கு எய்தும் இடர்களை நீக்கி உற்றிடத்து உதவி செய்து நல்ல தவத்தினைத் தாங்கி வன்றொண்டுபுரிந்து முடிவில் திருக்கைலாயமலையில் சிவகணங்களின் தலைவர்கட்கெல்லாம் தலைவராகும் பெரும்பதம் பெற்று இன்புறுவாராயினர்.

[விளக்கம் அடுத்த இதழில் வரும்.]

அதிலும் இந்த அம்மா கர்ப்பிணி; ஐயோ பாவம்! இவர்கள் ஒரு குற்றமும் செய்யவில்லையாம். அந்த ராஜா ஏனோ இவர்களை வெட்டச்சொன்னார். இவர்கள் அழுவதைப் பார்த்தா மனசு என்னமோ போல ஆயிட்டுதடா. இவர்களைக் கொன்றால் நம்ம குழந்தை குட்டிகளுக்கு ஆகாதடா. நீ என்னடா நினைக்கிறாய்'' என்றான்.

மற்றொரு கொலைஞன், "ஆமாண்டா தம்பீ! எனக்கும் இந்த அம்மாவைப் பார்த்தால் மனம் உருகுதடா! பாவமடா பாவம். போயும்போயும் இந்த உத்தமியைக் கொல்லச் சொன்னாரே அந்த ராஜாவுக்கு புத்தியே யில்லையடா? ஆமாண்டா இவர்களை வெட்டாமல் விட்டுவிட்டால் அந்த ராஜா நம்மை வெட்டிப்போடுவாரே! அதற்கென்ன செய்கின்றது?''

கொலைஞன் "இவர்களை இரகசியமாக எங்கேயாவது போகச் சொல்லி விட்டு ஏதாவது இரத்தக்கறையைக் காட்டி ராஜாவை ஏமாத்தி விடலாமடா'' என்றான்.

கொலைஞர்கள் வேறு ஒரு சீலையைக் கொணர்ந்து தையல்நாயகியிடந் தந்து, அதை உடுத்துக்கொள்ளுமாறு புரிந்து இரகசியமாக ஊரை விட்டு வெளிப்படுத்தினார்கள். அவள் உடுத்தியிருந்த சீலையை வேறு ஒரு விலங்கைக் கொன்று அந்த இரத்தத்தில் நனைத்துக் கொண்டுபோய் மன்னனிடங் காட்டினார்கள். மன்னனுடைய சீற்றந் தணிந்தது. பூங்கொடி அளவற்ற மகிழ்ச்சி யடைந்தனள். இராஜசேகரன் தனது முதல் மந்திரியும் சிறந்த நற்குண சீலனும் ஆகிய விவேகபானுவை மந்திரிப் பதவியை விட்டு விலக்கி ஊரைவிட்டுப் போமாறு செய்தான்.

இராஜசேகரன் இந்த நிகழ்ச்சிக்குப்பின் பித்தம் பிடித்தவன் போலானான். வெறுப்புணர்ச்சியுடன், வாழ்வில் உவர்ப்பு கொண்டு, முகத்தில் மலர்ச்சியின்றி அரசாட்சி செய்துகொண்டு வந்தான்.

ஓராண்டு கழிந்தது. இரவு மணி 10. மன்னன் இராஜசேகரன் மூத்த மனைவி பூங்கொடியின் அரண்மனைக்குச் செல்லுகின்றான். உள்ளே பூங்கொடியிடம் தோழி சிறிது உரிமையுடன் வாதுசெய்து கொண்டிருந்தாள். மன்னன் அதனை வெளியிலிருந்தபடியே செவி கொடுத்து கேட்கலானான்.

தோழி:-அம்மா! எனக்குப் பின்னே தருவதாகக் கூறிய நிதியும் நிலமும் வீடும் தரவே இல்லையே. குடியிருக்க வீடு இன்றி துன்பமாக இருக்கின்றது. ஆதலினால் நல்ல ஒரு வீடு தரவேண்டும். எனது கணவனுக்கு நல்ல உத்யோகம் தரவேண்டும்.

பூங்கொடி:- தோழீ! ஏண்டி உனக்கு ஆயிரம் பொன் தந்தேனே; போதாதா. நீ என்னடீ பெரும்பாடு பட்டுவிட்டாயா? அந்த செருப்பைக் கொண்டுவந்து வைத்ததுதானே. அந்தச் சிறு வேலைக்கு ஆயிரம் பொன் போதாதா?

தோழி:-அம்மா! அந்த வேலை சிறியதா? முதல் மந்திரியார் விவேகபானு எவ்வளவு பெருந்தகைமையாளர். அவர் வீட்டிலே சென்று அவர் அறியாமற்படிக்கு அவருடைய பாதுகையைக் கொணர்ந்தேன். அவர் அறிந்திருந்தால் என் தலை போயிருக்கும்.



அந்தப் பாதுகையைக் கொணர்ந்து சின்னம்மாவுடைய கட்டிலின் கீழ் வைக்கும்போது என் உயிரே கலங்கியது. பாவம்! கருப்பவதியாக இருந்த அவர்களது உயிரே நீங்கியது. இவ்வளவு பெரிய வேலை செய்த எனக்கு நீங்கள் எவ்வளவு கொடுத்தாலும் தகும். நான் அப்படி செய்யவில்லையானால் இந்த உயர்வு உங்களுக்கு வந்திருக்குமா?

பூங்கொடி:- தோழீ! நில்லடி நில். உன்னால்தான் எனக்கு உயர்வு வந்து விட்டதா? என்னுடைய யுக்தி எனக்கு உயர்வு தந்தது. இந்த யுக்தியை நான்தானே கண்டுபிடித்தேன். நீ என்னடி! நான் சொன்னபடி அந்த மந்திரியின் பாதுகையைக்கொணர்ந்து வைத்த வேலைதானே? நீ இல்லையானால் இன்னொருத்தி அந்த வேலையைச் செய்கின்றாள்.

என்று இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருப்பதை மன்னன் இராஜசேகரன் வெளியில் நின்று கேட்டுக்கொண்டிருந்தான். அவன் மனத்தில் ஒரு பெரும் மாறுதல் ஏற்பட்டது. பூங்கொடி செய்த வஞ்சனை புலனாகியது. "ஆகா! நான் மதிமோசம் போனேனே. இப்பாதகியின் வஞ்சனையால் ஒரு குற்றமும் இல்லாத என் காதற்களஞ்சியத்தை கற்புக்கரசியைக் கொன்றுவிட்டேனே. அறிவே வடிவாகிய விவேகபானுவை வீணுகச் சந்தேகித்துப் பதவியைவிட்டு விலக்கினேனே. எவ்வளவு பெரிய பாபத்தைச் செய்துவிட்டேன். அந்தோ! மீளா நரகத்திற்கு ஆளானேனே. இந்தப் பழிபாவத்தினின்றும் நான் எப்படி மீள்வேன்?'' என்று எண்ணாத எண்ணங்களை எல்லாம் எண்ணி மனம் புண்ணுகினான். ஒருபுறம் சினம் பொங்கி யெழுந்தது.

உள்ளே சென்றான். மன்னனைக் கண்டவுடன் தோழி ஒருபுறம் பதுங்கினாள். பூங்கொடி வந்து கணவனை வரவேற்றாள். இராஜசேகரன் அவளைக் காலினால் உதைத்து உருட்டினான். "அடிபாதகீ! உன் வஞ்சனையை யறிந்தேன்'' என்று சீறினான்.

பூங்கொடி "என் பிராணபதீ! ஒரு குற்றமும் செய்யாத என் மீது ஏன் தங்களுக்கு இவ்வளவு கோபம்? தங்கள் மனத்தைக் கலைத்தவர்கள் யார்? சற்று நிதானியுங்கள்'' என்றாள்.

இராஜசேகரன் ஒருபுறம் மறைந்திருந்த தோழியின் கூந்தலைப் பிடித்து இழுத்து, கீழே தள்ளி உதைத்து உருட்டி கையில் வடிவாளை எடுத்து, "சண்டாளீ! இந்த வாளுக்கு இறையாகுமுன் என்ன செய்தாய்? ஒளியாமல் கூறு'' என்றான்.

தோழி, "கருணையே வடிவாய பெருமானே! என்னைக் கொல்லாதீர். மன்னியுங்கள். பாழும் பணத்தாசையால் செய்துவிட்டேன். சின்னம்மா கர்ப்பவதியானதால் பெரியம்மா மனம் வருந்தி மந்திரியாருடைய பாதுகையை சின்னம்மா படுக்கையின் கீழ் வைக்குமாறு என்னை ஏவினார்கள். ஆயிரம் பொன்னுக்கு ஆசைப்பட்டு நான் முதல் மந்திரியார் பாதுகையைக் கொணர்ந்து சின்னம்மாவின் கட்டிலின் கீழ் வைத்து விட்டேன். பெரியம்மா சொல்லை மறுக்கப் பயந்து செய்தேன். அரசே! என்னை மன்னியுங்கள்'' என்று கால்மீது விழுந்து அழுதாள்.

மன்னன் ஆருத துன்பமும் மாருத கோபமும் அடைந்து தோழியையும் பூங்கொடியையும் தனித்தனியே சிறைப்படுத்தினன். தான் செய்த பெருந்தீங்கை உன்னி உன்னி உள்ளம் நைந்தான். "அணுத்துணையும் குற்றஞ் செய்யாத நம் அரும் பெருஞ் செல்வி தையல்நாயகியை வீணே ஐந்துமாத கருவுடன் கொன்று விட்டோமே. ஆகா! எத்துணைப் பெரிய பாவத்தைச் செய்து விட்டேன். அந்தோ! மீண்டும் எப்பிறப்பில் அவளைக் காண்பேன். என்று மனம் வருந்தினன்.

சிறைச்சாலையில் பூங்கொடி தான் செய்த தீவினைக்கு ஏற்ற தண்டனையை யடைந்தாள். "தன்வினை தன்னைச்சுடும் ஓட்டப்பன் வீட்டைச் சுடும்' என்றபடி என்வினை என்னையே யழித்துவிட்டது. உத்தமியைக் கொலைபுரிவித்த பாவம் ஓராண்டுக்குள் என்னைவந்து வாட்டிவிட்டது" என்று கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தாள்.

இராஜசேகரன் சிந்தனைக்கடலில் ஆழ்ந்தான். ஊணும் உறக்க முந் துவர்த்தான். அரசாங்க காரியங்களை யெல்லாம்அமைச்சர்களே பார்த்துவந்தார்கள். முதல்மந்திரி யில்லாமையால் அரசாங்கமும் செவ்வையாக நடைபெறவில்லை. வரவர அரசாங்கம் தளர்வு பெற்றது.

மன்னன் எப்போதும் தன் அன்பின் களஞ்சியமாகிய தையல் நாயகியை நினைந்து நினைந்து நெட்டுயிர்ப்புடன் கவல்வான். "என் மாணிக்கமே! அறிவுநிறைந்த ஆரணங்கே! தையல்நாயகமே! பாதகியின் படுமோசத்தையறியாது, உன்னை வீணாக ஐயுற்றுக் கொன்றுவிட்டேனே! உன் உத்தம குணத்தையறியாது கெட்டேனே. இனி எந்தப்பிறப்பில் உன் குளிர்ந்த முகத்தைப் பார்ப்பேனே? தேனினும் இனிய உன் மதுரமொழியைக் கேட்டு மகிழும் நாள் என்றோ? இந்த உலக வாழ்வே எனக்கு வேம்பாகிவிட்டது. உன் ஆன்மா சாந்தியடைவதாக. விரைவிலே நான் அங்கு வந்து மேல் உலகத்திலே உன்னைச் சந்தித்து மன்னிப்பு கேட்டுக்கொள்வேன்' என்று தனக்குள் முறையிட்டுப் புலம்புவான்.

மன்னன் மனைவியின் பிரிவால் வருந்தி இளைத்தான். அரசாங்கத்தைக் கவனியாமையால் படைவலி குன்றியது. இதனைப் பகையரசர் அறிந்து படையெடுத்து சதுரங்கசேனையுடன் இராஜக் கிருகத்தை வளைத்தனர். எங்கும் போர் முரசு முழங்கியது. தூங்கிக் கொண்டிருந்த சிங்கம் துயிலுணர்ந்து எழுந்ததுபோல் இராஜசேகரன் துன்பத்தை மறந்து வீறுகொண்டு எழுந்தான். "இராஜசிங்கத்தை நரிகள் எதிர்த்ததுபோல் என்னைப் பகைவர் வந்து எதிர்த்தனரா? நன்று நன்று! என் வீரம்; மாற்றலரை இப்பொழுதே மறலிக்கு விருந்து வைப்பேன்" என்று வீரவசனங்களைக் கூறி கொதித்து நின்ருன். அவன் முகத்திலே வீரக்கனல வீசியது. சேனுதிபதியை அழைத்து தன் சேனைகளை நடாத்திக்கொண்டு போருக்குப் புறப்படுமாறு கட்டளையிட்டான். சேனுதிபதி "மன்னரேறே! எதிரிகள் சேனைகள் மிகுதியாக இருக்கின்றன. நம்முடைய சேனைகள் பராமரிக்காமையால் குறைந்திருக்கின்றன. சேனைகளை மேற்கொண்டு பெருக்குவது நலம்" என்ருன்.



அரசன் கட்டளைப்படி சேனைகளைத் திரட்டினர்கள். புதிய புதிய வீரர்கள் வந்து படையில் சேர்ந்தார்கள். விரவுணர்ச்சியுடனும், இராஜபக்தியுடனும், பல்லாயிரம்பேர் படைதாங்கி நின்றனர். அவ்வாறு சேர்ந்த பலர்களுக்குள் சிறந்த வாலிபன் ஒருவன், அவன் முகத்தில் எங்குமில்லாத ஒரு பொலிவு குடிகொண்டிருந்தது.

அவன் அரசனைச் சந்திக்கும் சந்தர்ப்பம் நேர்ந்தது. அரசன் அந்த வீரஇளைஞனைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தான். அவனிடம் அளவற்ற அன்பு உண்டாகியது. அவனைத் தன் அருகில் மெய்க்காவலனுக அமைத்துக்கொண்டான்.

அரசன்:- அப்பா! உன் பேர் யாது?

இளைஞன்:- அரசே! என்பேர் உதாரம்.

அரசன்;- சந்தோஷம். உதாரா! உனக்கு என்ன என்ன போர் தெரியும்?

உதாரம்:-வேந்தே! வாட்போர் தெரியும்; ஈட்டிச்சண்டை தெரியும்.

அரசன்:- நல்லது ; போருக்கு முக்கியமானது எது?

உதாரம்:- வேந்தே! போருக்கு முக்கியமானது உயிரைத் துரும்பாக எண்ணுவதே. எனக்கு உயிர் துரும்பு; மரணம் கரும்பு.

பதினைந்து நாட்களாக பெரும் போர் நிகழ்கின்றது. இருதிறத்துச் சேனைகளும் இளைக்காமலும் சளைக்காமலும் தங்கள் தங்கள் வலிமையைக் காட்டிப் போரிடுகின்றனர். வெற்றி மடந்தை எந்தப் பக்கம் போவது என்று அறியாது மயங்கினள்.

நடுப்பகல். வெய்யில் தகிக்கின்றது. நிலஞ் சுடுகின்றது. சேனைகள் தண்ணீர் தண்ணீர் என்று தவிக்கின்றன. தனது சேனை தளர்வதை இராஜசேகரன் நோக்கினன். தன் தேரை முன்னணிக்குச் செலுத்திப் பகையரசனுடன் எதிர்த்துப் போரிட்டான். பகையரசன் பாணமழை பொழிந்து இராஜசேகரனுடைய தேரை யழித்தான். வில்லும் அழிந்தது. இராஜசேகரனைப் பிடித்து தன்தேரில் கட்டிக்கொண்டு வெற்றிச் சங்கத்தை முழக்கித் திரும்பினன். மன்னன் பிடிபட்டதால் சேனைகள் புறங்கொடுத்து ஓடின. அபபோது புதரிலே இருந்து அரசசிங்கம் வெளிப்பட்டதுபோல் வீர இளைஞனுகிய உதாரம் திடீர் என்று வந்து, தன் மன்னனைக் கட்டிக்கொண்டு போகும் பகையரசன் தலையை வெட்டி வீழ்த்தினன். கறங்குபோல் சுழன்று அருகில் உள்ளவர்களைக் கொன்று குவித்தான். இராஜசேகரனைக் கட்டவிழ்த்து தேரின்மீது ஏற்றினன். வெற்றிச் சங்கம் ஊதினன். புறங்கொடுத்த சேனைகள் மகிழ்ந்து நின்றன. எதிர்பாராத வண்ணமாக இராஜசேகரனுக்கு வெற்றி கிடைத்தது. எல்லோரும் பகையரசனைக் கொன்று மன்னனை மீட்ட அந்த வீர இளைஞனைப் பாராட்டினர்கள்.

யுத்தம் முடிந்தது. இராஜசேகரன் அரண்மனை சேர்ந்தான். ஊரெங்கும் மன்னனைக் காப்பாற்றிய வீரனைப்பற்றியே பேச்சு. வெற்றிக் கொண்டாட்டம் கொண்டாடப்பெறுகின்றது. எங்கும் மங்கல விளக்குகள் வரிசைவரிசையாக எரிகின்றன. தோரணங்கள்

வாரணங்கள் அலங்கரிக்கப்பட்டு நிற்கின்றன. ஆடல்; பாடல்; அன்னதானம்; கோயில்களில் விசேட வழிபாடு.

கொலுமண்டபத்தில் மன்னர்மன்னன் இராஜசேகரன் பொற்சிங்காதனத்தில் வீற்றிருக்கின்முன். அமைச்சர்கள் புடை சூழ்ந்திருக்கின்றனர். சகலவிதமான மங்கல கீதங்களும் வாத்தியங்களும் ஒலிக்கின்றன. மகிழ்ச்சி மயம்.

இராஜசேகரன் யுத்தத்தில் பெரும்போர் செய்த வீரர்கள் அனைவருக்கும். தகுதிக்கும் வீரத்திற்கும் தக்கவாறு பொன்னுரம், நவரத்தினப்பதக்கம், பொற்சரிகைப் போர்வைகள், முதலியன வழங்கினன். முடிவில் அரசன் எழுந்து "சபையோர்களே! இத்தனை மகிழ்ச்சிக்கும் கொண்டாட்டத்திற்கும் காரணம் யார் என்று நீங்கள் அறிவீர்கள். நான் காலவசத்தால் பகையரசன்பால் கட்டுண்டு தோல்வியுற்றபோது இதோ என் அருகில் நிற்கும் இந்த உதாரம் என்ற வீரனல் விடுதலை பெற்றேன். இவ்வீராதிவீரன் பகையரசனைத் தான் ஒருவனே ஒருவாளினல் எதிர்த்து அஞ்சாத நெஞ்சுடன் போரிட்டுக்கொன்று, என்னைமீட்டான். இந்த அரசாங்கத்தை நிலைநிறுத்தினன். ஆதலினல் இவ்வீரனுக்கு முதல் பரிசு தரவேண்டும். ஆனல் நான் இறுதியில் உயர்ந்த பரிசாகத் தரவேண்டும் என்று எண்ணினேன். என் உயிரினும் இனிய இந்த வீரனுக்கு எதைத்தருவது என்றே எனக்கு விளங்கவில்லை. என் மார்பில் உள்ள விலைமதிக்க முடியாத இந்த மாணிக்கமாலையைத் தருகின்றேன்' என்முர்.

வீர இளைஞன், "அருள்குடிகொண்ட அரசரேறே! தங்கள் திருவடிகட்குப் பல்கோடி வணக்கம். அடியேன் ஒன்றும் விசேடமான காரியத்தை செய்துவிடவில்லை என்கடமையைத்தானே செய்தேன். அடிமையாகிய யான் அரசராகிய தங்கட்கு உற்றசமயத்தில் உயிர் வழங்கி உதவுவது எனது முதற்கடமையன்ருே? அந்த முறையில் அடியேன் சிறிது உதவினேன் அதுவும் எனது ஆன்ம நாயகனுகிய எந்தை கந்தவேளது கருணையாலேயே நிகழ்ந்தது. தாங்கள் எனக்குப் பரிசாக வழங்கஇருக்கும் இந்த மாணிக்க மாலையை நான் விரும்பவில்லை. நான் விரும்புவது தங்கள் அன்பு ஒன்றையே. இந்த மாணிக்கமாலைக்கு விலையும் மதிப்பும் உண்டு. தங்கள் அன்புக்கு விலைமதிப்புஇல்லை. ஆதலினல் அன்பை எனக்கு அளிப்பீர்" என்முன்.

மன்னர் பெருமான், "உதாரம்! உன்பெருக்கேற்ற உதார குணம் உன்பால் உளது. எனது பூரணமான அன்பு உனக்கு முன்னமே தரப்பட்டது. என் அருகில்வா" என்று அழைத்து ஆலிங்கனம் செய்தார். அப்போது மன்னன் உள்ளமும் உடலும் குளிர்ந்தன. என்றுமில்லாத ஒரு பேரானந்தவெள்ளம் பெருகியது. உதாரத்திற்கும் அளவற்ற மகிழ்ச்சியுண்டாகியது.

இராஜசேகரன், "அப்பா! உதாரம். உனக்கு ஒரு இளங்கொடியை மணம்புரிவித்து இன்புறச் செய்யக்கருதுகின்றேன்" என்முன். உதாரம், "அரசே! எனக்கு முன்னமே திருமணமாயிருக்கின்றது. ஒருகுழந்தையும் பிறந்திருக்கின்றது. அந்தக்குழந்தையை தாங்கள் ஆதரித்தால் அதுவே எனக்கும் செய்யும் உபகாரமாகும்" என்முன். மன்னன், "அப்பா! சந்தோஷம். உன் மகன் எங்கே? கூப்பிடு. அந்த குழந்தை என்குழந்தை. உயிர் உதவிய உன்மகனுக்கு என் அரசையும் உதவுவேன்" என்முன். உதாரம் தன்மகனைத் தருவித்தான் ஐந்து ஆண்டு நிரம்பிய அம்மகன் உதாரத்தினுடைய கட்டளைப்படி மன்னனை வணங்கினன். அம்மைந்தனுடைய கட்டழகையும் இராஜ வடிவத்தையும் கண்ட அரசனும், அவையிலுள்ளார் அனைவரும் இன்பக் கடலில் முழுகிவிட்டார்கள். சந்திரனைக் கண்ட சகோரப்புள்போல் உவகையுற்றனர். சிலர் அரசனுடைய பிரதிபிம்பம்போல் உள்ள அந்த இளஞ்சிறுவனைக் கண்டு அதிசயித்தனர். அரசனுடைய திருவுருவம்போல் இருப்பதால் இவன் அரச குமாரனே? என்றனர்.

வேந்தர் கோமான் "வீரனே! இந்தக் குழந்தையைக் காணுந்தோறும் என் உள்ளம் உருகுகின்றது. எத்தனை நேரம் பார்த்தாலும் போதும் என்ற திருப்தி ஏற்படவில்லை. இதுமுதல் இம்மகன் உன் மகனன்று; என் மகன்" என்முன்.

உதாரம்:—அரசரேறே! இம் மகன் இதுமுதல் தங்கள் மகனன்று; முன்னும் தங்கள் மகன்தான். தங்கள் சொத்தைத் தங்களிடம் ஒப்புவித்துவிட்டேன். என் கடமையைச் சரியாகச் செய்தேன்" என்முன்.

வேந்தன்:—உதாரம்! இச் சிறுவன் தாயாரை விட்டுப் பிரிந்திருப்பானு? பால் மணம் மாருத பச்சிளங் குழவியாயிற்றே? இவன் பேர் யாது?

உதாரம்:—இரவலர் மிடி தீர்க்கும் புரவல! இவன் பேர் குணசேகரன். இவன் தாய் மடிந்துவிட்டாள்.

வேந்தன்:—அச் சிறு பாலனையெடுத்து உச்சி மோந்து முத்தமிட்டு, "குணசேகரா! உன் அம்மா எங்கே?

குணசேகரன், "அம்மா இதோ" என்று உதாரத்தைக் காட்டினன். அவையில் உள்ளோர் அனைவரும் நகைத்தனர்.

அரசன்:—உதாரம்! இந்தப் பிள்ளை உன்னையே "அம்மா" என்று காட்டுகின்றதே. அம்மாவும் அப்பாவும் நீயேதான் போலும்!

உதாரம்:—"அரசே! அம்மா நான். அப்பா தாங்கள்" என்று கூறிவிட்டு அங்கிருந்த ஒரு திரை மறைவில் சென்று திரும்பினன்.

இராஜசேகரன் "ஆ! என் அன்பே!" என்று தழுவினன். சபையோர் யாவரும் திடுக்கிட்டனர். "என் காதற் கிளியே! தையல் நாயகியே! நீ மாண்டுபோனய் என்று வருந்தினேனே. நீயா ஆண் வீர வடிவுடன் என் அருகில் இருந்து, எனக்கு மெய் காவலனக விளங்கி எனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்துக் காப்பாற்றினய். என்னை மன்னிப்பாயா? உன் கற்பு நலத்தையறியாது பாதகியின் தோதகத்தை மெய்யென்று நம்பி, உன்னைக் கொலை புரியுமாறு கூறினேன். எப்படி நீ உயிர் பிழைத்தாய்? குழந்தையை எவ்வாறு பெற்றனை? உன் வீரச் செயல்களையும் அரும் பெரும் குணங்களையும் எண்ணினல் அளப்பரிய ஆச்சரியத்தை அடைகிறேன்" என்முன்.

உ

# பூசாரி பாட்டு

**கி. வா. ஜகந்நாதன்**

தமிழ்நாட்டில் மிகச்சிறப்பாக வழிபடப்பெறும் கடவுள் முருகன் என்று சொல்வது புலவர் வழக்கம். மற்றக்கடவுளரை வழிபடும் முறைகள் இருக்கவும் முருக வழிபாட்டைத் தமிழருக்கே சிறப்பாக உரியதென்பதற்குப் பல காரணங்கள் சொல்லலாம். தமிழ் மொழியினுடைய வளர்ச்சியில் முருகனுடைய தொடர்பு மிகுதியாக இருக்கிறது. தமிழ்நாட்டிலே திருவவதாரம் செய்த வள்ளியெம் பெருமாட்டியை முருகன் மணந்துகொண்டான். சூர சங்காரம் செய்து வெற்றி கொண்டாடிய இடம் தமிழ் நாட்டில் உள்ள திருச்சீரலைவாயாகிய

---

தையல் நாயகி:—"சுவாமீ! முருகனருளால் கொலைஞர் மனமிரங்கி என்னைத் தப்புவித்தனர். தங்கள் ஆசீர்வாதத்தால் இம் மதலை சுகமாகப் பிறந்தது. இளமையில் எல்லாக் கலைகளையும் கற்றுத் தேர்ந்தேன். ஆதலினால் போர் வீரனாக வந்து சேவை செய்தேன். உதாரம் என்று என் பேரைத் தெரிவித்தேன். தமிழில் இரண்டு என்பது உ என்ற எழுத்தல்லவா? இரண்டாவது தாரம் என்பதை உ தாரம் என்று மறைமுகமாகக் கூறினேன். என் வினையை நோவதைத் தவிர யான் யாரை நோவேன்!' என்றாள்.

இராஜ சேகரன்:—"என் அமிர்தமே! நான் உனக்குப் பெருந் தீமையைச் செய்துவிட்டேன். என் பண்டைத் தவம் உன்னையடையப் பெற்றேன்" என்று மகனைத் துடையிலும் மனைவியை அருகிலும் அமர்த்தி சிங்காதனமேறி வீற்றிருந்தான்.

தையல் நாயகி:—"பெருமானே! எனக்குப் பரிசு தருகிறேன் என்றீரே! நான் கேட்கும் பரிசு தருவீரா?" என்றாள். மன்னன் "மாணிக்கமே! எதை வேண்டுமானாலும் தருகின்றேன். எல்லாம் உன்னதுதானே? நான் இப்போது என்ன செய்யவேண்டும் சொல்" என்றான்.

கற்பின் மிக்க காரிகை, "தரும துரையே! என் மூத்தாளை மன்னித்து சிறையினின்றும் நீக்கி என் மேல் வைத்த அன்பை அவர்கள்மீது வைத்து ஆதரிக்க வேண்டும். இதுவே எனக்குத் தரும் பரிசு" என்றாள். சபையும் தருமமும் வாய் திறந்து அரற்றின. தையல் நாயகியின் தனிப்பெருங் கருணையை எண்ணி அதிசயித்தனர். தையல் நாயகியின் வேண்டுகோளின்படி பூங்கொடி விடுதலை பெற்றாள். தன் இளையாளுடைய பூம் பதத்தில் வீழ்ந்து வணங்கினாள். தையல் நாயகியும் அவளது கால்மேல் வீழ்ந்தாள், பூங்கொடியும் தனது பொறாமைக் குணத்தை விடுத்து தையல் நாயகிபால் அளவற்ற அன்பு பாராட்டினாள். ஜனங்கள் அனைவரும் தையல்நாயகியின் சிறந்த அருட்குணத்தைப் பெரிதும் வியந்து பாராட்டினார்கள். மூத்த மந்திரி விவேகபானுவை மீட்டும் அப்பதவியில் வைத்து ஆதரித்தான். இராஜசேகரன், பூங்கொடி, தையல்நாயகி, குணசேகரன் என்ற மூன்று கண்களுடன் சந்திர சேகரரைப் போல நீண்ட நாள் வாழ்ந்து இன்புற்றனன்.



திருச்செந்தூர். தேவயானையின் திருமணம் திருப்பரங்குன்றத்திலே நிகழ்ந்தது. முருகனைப் புகழ்வதற்குரிய தோத்திர நூல்கள் தமிழில்தான் மிகுதியாக உள்ளன. அன்றும் இன்றும் முருகன் ஆவேசரூபமாக வந்து வேண்டுவார் வேண்டுவன அருள் செய்யும் பிரத்தியட்ச தெய்வமாகத் தமிழ் நாட்டில் விளையாடுகிறான்.

இந்த நாட்டில் முருக வழிபாடு சிறந்து நிற்பதை எவ்வாறு அறிவது? தமிழ் நாட்டினருடைய உணவு நெல்லஞ் சோறு என்று சொல்கிறோம்; கம்பு, கேழ்வரகு, சோளம், வரகு முதலிய பிற உணவுகளை உண்பார் இருந்தாலும் ஏழை முதல் செல்வர் வரையில் யாவரும் அரிசிச் சோற்றை உண்கிறார்கள். இந்த நாட்டு உணவுப்பொருள் நெல் என்று சொல்கிறோம். ஏழையர் முதல் செல்வர் வரையில் விரவியிருக்கும் தன்மை அதன் தலைமையை வெளிப்படுத்துகிறது.

அப்படியே முருக வழிபாடு தமிழ் நாட்டில் தலைமை பெற்றதென்பதற்கு அடையாளம், உயர்ந்த அறிவு படைத்த ஞானியரும், இந்த உலக வாழ்வில் ஈடுபட்டு வாழ்பவர்களாகிய மலைவாழ் சாதியினரும் இடைப்பட்ட பிறரும் தங்கள் தங்கள் இயல்புக்கு ஏற்றபடி முருகனைக் கொண்டாடுகிறார்கள் என்பது. வேதம் வல்ல வித்தகரும் விரதம் வல்ல முனிவரும், அறிவு மிக்க சான்றோரும், புலமை மிக்க புலவாணரும், நாகரிகம் மிக்க நகர வாசிகளும் முருகனை வழிபடுவர். அவ்வாறே குறவரும், கொல்லுந் தொழிலையுடைய வேட்டுவரும் பிறரும் முருகனை வழிபடுவர். இப்படி 'தோட்டி முதல் தொண்டைமான் வரையில்', வேட்டுவர் முதல் வேந்தன் வரையில் அப் பெருமானைக் கொண்டாடும் நெறி தமிழ் நாட்டில் அமைந்ததனால் இந் நாட்டுக்குச் சிறந்த கடவுள் முருகன் என்று அறிஞர் கூறினர்.

பலரும் பரவும் தெய்வம் முருகனாக இருப்பினும் அவனை வழிபடும் முறை அந்த அந்தக் குழுவில் வெவ்வேறு வகையாக அமையும். குறவர் கூடி ஆடுறுத்து வெறியாடி முருகனை வழிபடுவர். காட்டில் உள்ளார் கடம்பிலும் ஆலமரத்திலும் முருகனை வழிபடுவர். ஆற்றங்கரையில் வாழ்வார் நீர்த்துறையில் முருகனை வழிபடுவர். இவ்வாறே சதுக்கத்திலும் சந்தியிலும் ஆற்றிடைக் குறையிலும் பூம் பொழிலிலும் முருகனுக்கு வழிபாடு எடுப்பது தமிழர் மரபு.

இவற்றையன்றி அங்கங்கே உள்ள திருக்கோயில்களில் பூஜையாதியன நிகழ்த்தியும் முருகனை வழிபட்டனர். உருவம் கடந்த நிலையில் அவனை வழிபட்டனர் மெய்ஞ்ஞானியர். பல பல உருவம் வைத்து வழிபட்டனர் வேறுபலர். உருவமும் அருவமும் இல்லாத நிலையில் கந்திலும் கடம்பிலும் முருகனைப் பூஜித்தனர் வேறு சிலர்.

நாடு முழுவதும் முருகனை வழிபட்டார்களாயினும், மலையும் மலையைச் சார்ந்த இடமுமாகிய குறிஞ்சிக்குத் தனி உரிமை பூண்டவன் முருகன். அந் நிலத்தில் பெரும்பாலும் முருக வழிபாடே நிலவும். விலங்குகளைக் கொன்று தின்றும், தினை விளைத்து உண்டும் வாழும் குறவருக்கு முருகன் வழிபடு கடவுள். அக்குறவர்களுக்குத் தெய்வ உணர்ச்சியை உண்டாக்கி அவர்களுக்குப் பிரதிநிதியாக முருகனை வழிபடும் பூசாரிக்கு வேலன் என்று பெயர். அவன் தன் கையில் வேலை வைத்துக் கொண்டு ஆடுவான். அதனால் அப் பெயர் உண்டாயிற்று. முருகனுடைய விக்கிரகத்தைப் பாதுகாத்துப் பூசித்து வருபவன் ஆகையால் அவனைப் படிமத்தான் என்று கூறுவதுண்டு. படிமம் என்பது விக்கிரகத்துக்கு ஒரு பெயர்.

வேலன் குறவருக்குக் குரு; பூசாரி. அவனும் முருகனுடைய உண்மையான உயர்வை அறிந்தவன் அல்ல. தினையரிசி வைத்து ஆட்டைப் பலியிட்டுப் பூவும் புகையும் கொண்டு முருகவேளைப் பூசை செய்வான். தனக்குத் தெரிந்த வகையில் அப் பெருமானைத் துதிப்பான். அங்கேயும் முருகன் அவர்களுடைய அன்பொன்றையே கருதி வெளிப்படுவான். அவர்களுக்கு வேண்டிய நன்மைகளை அருள் செய்வான். 'அருவமும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்ருய்ப், பிரமமாய் நின்ற' முருகன் வேலன் வெறியாட்டிலே செய்யும் உபசாரங்களை உவந்து, அவன் செய்யும் தோத்திரங்களையும் ஏற்றுக்கொண்டு அங்கே வெளிப்படும் செயல் வியக்கத்தக்கது. உலகமெலலாம் ஆக்கி அளித்து அழிக்கும் கடவுள் அந்த நாகரிகமற்ற மக்கள் கூட்டத்திற்கும் இனியனுக எழுந்தருள்கிருனே! வேலன் ஏத்தும் வெறிப்பாட்டு உண்மையாக முருகவேளின் புகழைச் சொல்வதா? அல்லவே!

கடுவன் இள எயினனுர் இந்தச் செய்திகளை நினைத்துப் பார்க்கிருர். "என்ன ஆச்சரியம்! இந்தப் பைத்தியக்கார வேலன் முருகனை உணர்ந்துவிட்டவன் போல என்ன என்னவோ சொல்லிப் புகழ்கிருன். உருவம் இல்லாத பெருமானுக்கு உருவமும், உறவில்லாத கடவுளுக்கு உறவின் முறையும் கூறுகிருன். பழங்கதைகளில் உள்ளவற்றையே அவன் சொன்னுலும் அறிவு நூல்கள் சொல்லும் உயர்ந்த உண்மை ஒன்று கூட அவனுக்குத் தெரிவதில்லை. அவன் கூறுவனவற்றை உண்மையென்று சொல்வதா? பொய்யென்று சொல்வதா?" என்று அவர் சிந்தனை ஓடுகிறது.

வேலன் எவ்வாறு ஏத்துகிருன்? அவனுக்கும் முருகன் திருவவதார வரலாறு முதலிய கதைகள் தெரியும். புராணப் பகுதியை மாத்திரம் அறிந்தவன் அவன். அதற்கு அப்பால் உள்ள தத்துவப் பகுதியை அறியாதவன். அவன் செய்யும் துதிகளில் முருகவேள் உருவ வருணனையும் அவதாரப் பெருமையும் வருகின்றன.



ஆறு மெல்லிய திருத் தலைகளையுடையவன் முருகன்; பன்னிரண்டு திரண்ட தோள்களையுடையவன்; அத் தோள்கள் முழவைப் போல் திரண்டு உருண்டு அழகாக இருக்கின்றன. அவனுடைய திருமேனிச் சோதி கண்ணைப் பறிக்கிறது. இளங் கதிரவனுடைய சோதி போல வீசுகிறது. உதயமாகி எழுந்த சூரியனுடைய சோதி காட்சிக்கு இனியதாக இருக்கும். முருகன் திருமேனிச் சுடர் கண் பொறுக்கும் அளவுக்கு விளங்குகிறது. முருகன் திருவவதாரம் செய்த இடம் நாணல் அடர்ந்த சரவணப் பூம்பொய்கை. அங்கே தாமரைப் பூவினிடையே எழுந்தருளினுன். நளின மலரின்கண்ணே உருப்பெற்றுத் தோன்றியபோது அவனுடைய பேரழகுக்கும் இளமைக்கும் மென்மைக்கும் ஏற்ற ஆதனமாக அந்தத் தாமரை அமைந்தது. மணங்கமழ் தெய்வத்து இளநலம் உடையவன் முருகன். மணமும் தெய்வத்தன்மையும் இளமையும் அழகும் ஆகிய இப் பண்புகளை முருகு என்ற சொல் குறிக்கும். முருகன் இவ்வளவையும் உடையவன். மலர்களுக்குள் தெய்வத் தன்மை உடையதாகப் புகழ் பெற்றது தாமரைப் பூ. மணமும் அழகும் மென்மையும் உடையது அது. ஆகவே அதுவும் முருகுடைய மலராயிற்று. அதன்கண் முருகுத் தெய்வம் தோன்றினுன். இந்த இயல்புகளை வெளியிடும் வேலன் பிறர் சொல்லக் கேட்டிருக்கிருன். பரம்பரையாக முருகனைப்பற்றிப் பெரியோர் சொல்லி வந்த சிறப்புக்களை அவன் உணர்ந்தவன். ஆகவே அவன் செய்யும் துதியில் அவன் அறிந்த இந்தப் பண்புகளை வைத்துப் பாடுகிருன்.

> மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத் தோள்
> ஞாயிற்றேர் நிறத்தகை நளினத்துப் பிறவியை!

[ஆறு மெல்லிய தலைகளையும், பன்னிரண்டு முழவு போன்ற தோள்களையும் கதிரவனது எழுச்சி பெற்ற நிறத்தின் அழகையும் தாமரையினிடம் தோன்றிய தோற்றத்தையும் உடையாய்! ஏர்-எழுச்சி. தகை-அழகு]

பிற தெய்வங்களிடம் காணுத தோற்றத்தைச் சொல்கிருன் வேலன். ஆறு முடியும் பன்னிரு தோள்களும் முருகனுக்கே உரியன. முருகனது ஞாயிற்றெழிலைப் புலவர்கள் பலர் பாராட்டியுள்ளார்கள். நக்கீரர் தாம் இயற்றிய திருமுருகாற்றுப்படையில் எடுத்த எடுப்பில், "உதய சூரியனது பேரொளியை ஒத்த ஒளியை உடையவனே!" என்று போற்றுகின்றுர்.

> 'உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
> பலர் புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
> ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி

என்பது அவர் பாட்டு.

முருகனுடைய திருவுருவ வருணனையோடு வேலன் நிற்ப தில்லை. அக்கடவுளுடைய பிற வரலாறுகளும் அவனுக்குத் தெரியும். உலகத்தையெல்லாம் சங்காரம் செய்யும் பரமனுக்குத் திருமகன் முருகன் என்பதும் அவன் அறிந்த செய்தி. முருகனுடைய திருமேனி செஞ்சோதி வீசுவதாதலின் அவனுக்குச் செவ்வேள் என்ற திருநாமம் இருப்பதையும் வேலன் அறிவான். மக்கள் விரும்பும் அழகும் சிறப்பும் இயல்புகளும் முருகன்பால் உள்ளன. எல்லா நலன்களும் சான்றவன் அவன். யாவருக்கும் மிக்கவன் தலைவன்.

காஅய் கடவுள் சேஎய், செவ்வேள்,
சால்வ தலைவ!

[உலகத்தை அழிக்கும் சிவபெருமானுடைய திருக்குமாரனே, செவ்வேளே, எல்லா நலன்களும் அமைந்தவனே, தலைவரே!]

சிவகுமாரனும் செவ்வண்ணப்பிரானும் குணமலையும் பிரபுவுமாகிய முருகனை வேலன் போற்றுகிறவிதம் இப்படி. அவன் முருகனைப் பூஜைசெய்து நடத்தும் விழாவாகிய வெறியாட்டு மகாகோரமானது. தினையரிசியை ரத்தத்தில் கலந்து வைத்திருக்கிறான். எங்கேபார்த்தாலும் சிவப்புமலர்கள். எல்லாம் ரத்தத்தை நினைவூட்டும். போதாக்குறைக்கு ஆட்டை அறுத்துப் பலியிடுகிறான். சுத்தசத்துவ மூர்த்தியாக முருகனைத் தியானிப்பவர்களுக்கு இந்தச் சூழலை நினைத்தாலே குலை நடுங்கும். பழக்கமில்லாதவர்கள் இந்தப் பூசாரி பண்ணுகிற அட்டகாசங்களைக் காண நேர்ந்தாலும் அப்படியே நடுங்குவார்கள். குழந்தைகளும் மகளிரும் நடுங்குவதைக் கேட்க வேண்டுமா? அவன் இடி இடித்தாற்போலக் கத்துவதும், உடுக்கையை அடித்து ஆடுவதும், இந்த ரத்தச் சூழலும் ஆகிய எல்லாம் அந்த இடத்தை ஒரே பயம் நிரம்பிய சூழலாக்கி விடுகின்றன. அங்கே நடக்கும் வெறியாட்டு விழா எப்படி மனோகரமாக இருக்கும்? பயங்கரமாக அச்சந் தருவதாகத் தான் இருக்க முடியும். அந்த விழாவை 'பேஎ விழவு' என்று புலவர் சொல்கிறார். பேஎ என்பது அச்சத்தைக் குறிக்கும் சொல்.

இந்தப் பயங்கரமான விழாவில் வேலன் முருகனை வழிபட்டுத் துதி பாடுகிறான். வெறிப்பாட்டுப் பாடுகிறான். ஆவேசத்தை உண்டாக்கும் பாடல் அது. அந்தப் பூசாரியின் பாட்டில் உள்ள செய்திகள் உண்மையா? பொய்யா?

இதைப்பற்றி அடுத்தபடி ஆராய்கிறார் புலவர்.

——:——



# திருப்புகழும் பார்வதியும்

(வ. சு. செங்கல்வராயபிள்ளை எம். ஏ. சென்னை.)

திருப்புகழிலும் பிற நூல்களிலும் அருணகிரியார் பார்வதி தேவிக்கு மிகச் சிறந்த ஸ்தானத்தைக் கொடுத்துள்ளார். தேவியின் பெருமையைத் தமிழ்மொழியில் முற்றுங் கற்று மகிழ விரும்புவோர் அருணகிரியார் தேவியைத் துதித்துக் கூறியுள்ள பாசுர அடிகளையும், அபிராமிபட்டர் அருளியுள்ள "அபிராமி அந்தாதி" என்னும் நூலையும் அவசியம் படிக்க வேண்டும். இனி திருப்புகழாகிய அருணகிரியாரின் நூல்களிற் பார்வதியைப் பற்றி வருவன கூறுவாம்.

**1. தேவியின் உருவமும் நிறமும்:**

செம்பொன் மேனியள், மரகதம் பொன் மேனி, ஆகாசரூபி, மரகத சொரூபி, பஞ்ச முக வாலை, வேதாகம கலைரூபாள், வேதச் சொரூபாள், நாதவடிவி, கோடி மதித் தோற்றம், மாணிக்க மின்னுள், பச்சையெறிக்கும் ப்ரபையள், பச்சை நங்கை, கோல நீல வருணத்தி.

**2. தேவியின் உடை:**

செம்பொற் பட்டு உத்தரியம்; புலியுடை.

**3. தேவியின் திரு நாமங்களுள் அருமை வாய்ந்தன:**

அகில ஜக அண்ட நாயகி, அஞ்சு முக நீலி, அம்பண சரதலி, (அர்பணம்-ஒருவகை யாழ்) ஆதியந்தமுமான சங்கரி, ஆறு சமயத்தி, எண்குண பூரணி, காயத்திரி, கோகுல சக்தி, சாய முதல்வி, தமனிய தநு தரி (பொன்வில்-மேரு), நவசித்தியருள் சத்தி நாக பூஷணத்தி, நாளுர்னிய சனி, பஞ்சபாணி, பதிவிரதை, முக்கோணத் தானத்தாள், ராஜ தலக்ஷண லக்ஷுமி, மழுவுழை கரத்தி, முயலக பதத்தி, மூவர்க்கு முன்னுள், வேதக்குழலாள்.

**4. தேவியின் வாகனம்:** விடை (எருது)

"கிழப்பொற்காளை மேலேறும் எம் நாயகி" (626)

**5. தேவியை வழிபடுவோர்:**

சரஸ்வதி, இலக்குமி, ரதி, இந்திராணி, கிருத்திகை முதலிய மாதாக்கள், சத்த மாதர்கள், ரம்பை ஆகிய தெய்வப் பெண்கள். தேவியின் பதத்திற் சிவபிரான் பணிவதால் அவரது சடா மகுடத்துள்ள கொன்றை, கரந்தை இவைகளின் மணம் தேவியின் பாதத்தில் வீசுகின்றது.

**6. தேவியின் பராக்ரமமும், திருவிளையாடலும், பெருமையும்:**

தேவி திருமாலின் தங்கை; கணபதியின் தாய்; முருகவேளின் அன்னை; சூரனை வெல்ல வேலாயுதத்தை முருகவேளுக்கு "எம் புதல்வா வாழி வாழி" என ஆசி கூறி அளித்தவள். சிவபிரானுக்கு உயிர்; சிவனுடன் நடனம் புரிபவள். (644) சிவபிரானது இடது

பாகத்தைப் பெற்றவள். சகல அண்டங்களேயும் ஈன்றவள். சகல உலகங்களுக்கும், உயிர்களுக்கும். ஐந்து பூதங்களுக்கும் ஒரு முதலாகி நின்றவள்; தமிழைத் தந்த பழையவள்; பொன் மலையை (மேருவை) ஏந்தி திரிபுரத்தை எரித்தவள் கூற்றை உதைத்தவள் (760) ஆலம் (விஷம்) உண்டவள்; அதனுல் நீலகண்டம் உடையவள்; முக்கோணத் தானத்தவள்* நவகோண சக்ரத்தில் அமைப்பவள்; (அடியார்களது) பிறவி அலையைத் தடுத்து நிறுத்துபவள்; கருதும் அன்பர்க்குச் சித்தி அளிப்பவள்; இரு நாழி நெல் கொண்டு முப்பத்திரண்டு அறங்களேயுங் கச்சியில் வளர்த்தவள்; தகப்பனும் தக்கனைத் தண்டனை பெற வைத்தவள்; "தகப்பனை மழுகொடு வெட்டிய நிமலிகை" (748) வேதங்களால் துதிக்கப்பட்டவள். யுக முடிவில் உலகங்களைத் தமது உதரத்தில் (வயிற்றில்) அடக்குபவள். சம்பந்தருக்குப் பாலமுது தந்தவள். ஈறிலாதவள் (1213); ஆகம நூல்களுக்கு எட்டாதவள் (192); அரன், அரி, அயன், அண்டர்களுக்கு எட்டாதவள் (640); அயன், மால், அரன் மூவரும் ஒன்றதான தேவி (365) பரத்தின் உச்சியில் நடம் நவில்பவள்(267)

7. திருமாலே தேவி:

திருமாலே தேவி-தேவியே திருமால் என விளக்கப்பட்டுள்ளது; ஆதலால் தேவேந்திர சங்க வகுப்பில் இரணியனைச் சங்கரித்தது தேவி என்று பாராட்டப்பட்டுள்ளது. "சங்கேந்திய கையன்" "பழைய சந்தத்தைப் பெற்ற மடப் பெண்" (458) "திகிரி மேவு கையாள்," 'அண்ட முண்ட நாரணி' (889) என வருவன காணலாம். அகர எழுத்தென முதன்மையாக நின்று 'உயிர்களை ரக்ஷிக்கத் தேவியே அரியென விளங்குகின்றாள்" என்கின்றூர். "அகரந் திரு உயிர் பண்புற அரியென்பதுமாகி" [608]

8. தேவியும் அருணகிரியாரும்:

தமது ஆணவம், மயக்கம், காமியம் இவைகளைத் தேவி அகற்றித் தமது பிறப்பை யொழித்து ஆண்டருளியதை அருணகிரியார் "ஆணவ மயக்கமுங்க(ல்)வி காமியம் அகற்றி, என்றனை ஆள் உமை பரத்தி" (647), "என் மாசு சேர் எழு பிறப்பையும் அறுத்த உமை 439" 'எனை அருள் வைத்திட்டாண்ட நாயகி'(482) எனத் தெளிவுற விளக்கியும்; "எனதுயிரெனுந்த்ரியம்பகி" "எனது தாய்", "எனை யீணசக்தி" (580) "எனையீண மலை மாது" (644), "என்க(ண்)ணில் வளருஞ் சிவகாமி" (608) என அருமையாகத் துதித்துமுள்ளார். [தொடரும்]

*ஒன்றெட்டுச் சக்ரதலப் பெண்-திருப்-456; "ஒளி நின்ற கோணங்கள் ஒன்பது மேவி உறைபவளே"—அபிராமி அந்தாதி.

*Printed & Published by M. Madhusoodana Sivam at the Thiruppugal Amirtham Press, 144 Swaminaicken Street, Chintadripeta, Madras., Editor: Sri Kirupanandavari*

# திருவருட்பா

திருமுருக கிருபானந்தவாரி அவர்களால் தொகுக்கப்பட்டது. இரண்டு தொகுதிகள். முதல் தொகுதியில் முதல் ஐந்து திருமுறைகளிலுள்ள விநாயகர், முருகவேள், சிவபெருமான், உமாதேவியார், இலக்குமி, கலைவாணி, நால்வர் முதலியோர் துதிகளும், இரண்டாவது தொகுதியில் ஆறுந் திருமுறையிலுள்ள பாடல்களும் கீர்த்தனைகளும் உள்ளன. தொகுதி ஒவ்வொன்றும் டெம்மி 16 பக்க அளவில் சுமார் 136 பக்கங்கள் கொண்டவை. இரு தொகுதிகளும் விலை ரூ. 1—0—0. தபாற்செலவு (ரிஜிஸ்டர் செய்தனுப்புங் கூலியுள்பட) 0—6—0.

திருப்புகழமிர்தம் காரியாலயம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.

---

## திருப்புகழ் மூன்று பாகங்கள்

திரு வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் பதிப்பு. திருப்புகழ் 1304 பாடல்கள். திருவகுப்பு, கந்தரந்தாதி (உரையுடன்), கந்தரலங்காரம், கந்தரநுபூதி, வேல்விருத்தம், மயில் விருத்தம், திருப்புகழ் சந்தக்குறிப்பு, அருணகிரியார் சரித்திர ஆராய்ச்சி, திருமுருகாற்றுப்படை முதலியன அடங்கியது. சுமார் 1400 பக்கங்கள். விலை ரூ 9—0—0. தபாற்செலவு ரூ 1—4—0, முன்பணமனுப்பவும். வி. பி. கிடையாது.

---

# மதிப்புரை

## திருமாபத்தினி:

ஐம்பெருங்காவியங்களுள் ஒன்று சிலப்பதிகாரம். மிகவும் இனிமையான நடையில் அரும்பெருங் கருத்துக்களை அமைத்து இதனை இளங்கோவடிகள் பாடியருளினர். பலப்பல அறநெறிகளை உபதேசிப்பது. இக்காவியத்தின் தலைவியாகிய கண்ணகிக்கு திருமாபத்தினி என்று ஒரு திருப்பெயருண்டு.

இதனை கற்றோரும் மற்றோரும் எளிதில் படித்து உணருமாறு சிறந்த எடுத்துக்காட்டுக்களுடன் எழுதப் பெற்றுளது. இதனை அனைவரும் படித்துப் பயன் பெறுவார்களாக.

இதன் ஆசிரியர், எமது அன்பரும் மிகுந்த அறிஞரும் ஆகிய உயர்திரு, தி. ராமலிங்க முதலியார் B. A. B. L. அவர்கள்.

கிடைக்குமிடம்: தி. இராமலிங்க முதலியார், B. A. B. L
79, கல்லத்தி முடுக்குத் தெரு, திருநெல்வேலி.

உ

முருகா

# திருத்தணி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானம் ஜீர்ணோத்தாரண மஹா கும்பாபிஷேக கமிட்டி.

1. திருத்தணிகை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி ஆலய ஜீர்ணோத்தாரணகமிட்டியார் 1941–ஆம் வருஷத்தில் ஆலயதிருப்பணியை எடுத்துக்கொண்டு பக்தர்களின் சகாயத்தினால் திருக்குளம் முதல் மலை மேல்பாகம் வரை படிகள் கட்டுவதும் பூர்த்தியாய்விட்டது. தவிர மலைக்குப் போகும் வழியில் சில மண்டபங்களும் 3–கோபுரங்களும் அவைகளிலிருந்த உருவச் சிலைகளும் புதுப்பிக்கப்பட்டன. புதியதாய் 2–கோபுரங்கள் கட்டப்பட்டன. வெளிப்பிராகாரம் தளவரிசை கல் பரப்பு அநேகமாய் பூர்த்தி ஆயிருக்கின்றது. கோயில் சுற்றுச் சுவர்களும் புதுப்பிக்கப்பட்டன.

2. மூலஸ்தானம் ஸ்தூபிக்கு இருந்த கலசமும், ஸ்ரீ அம்மன் கோயில் கலசங்களும் நூதனமாகப் பிரதிஷ்டை செய்வதற்காக மூன்று புது கலசங்கள் செய்து தங்க முலாம் பூசிப் பூர்த்தியாகியிருக்கின்றன.

3. பாலாலய பிரதிஷ்டை பிரத்தியேக மண்டபம் ஒன்றில் 1-2-48உ செய்யப்பட்டு நித்திய பூஜா கைங்கர்யங்கள் அங்கே நடந்து வருகின்றன. ஆடி கிர்த்திகை தினத்தில் (30–7–48உயில்) பக்தர்கள் வழக்கப்படி மூலஸ்தானத்திலேயே ஸ்ரீ சுவாமியை தரிசிப்பதற்கு விரும்புவார்களாதலால் மஹா கும்பாபிஷேகத்தை ஆடி கிர்த்திகைக்கு முன்னதாகவே, ஆனிமீ 29உ (12–7–48) திங்கட்கிழமை நடத்த ஏற்பாடாகியிருக்கின்றது.

4. இதற்குக் கால அளவு நிரம்பவும் குறைவாக உள்ளது. மேலும் பாக்கியிருக்கும் திருப்பணிகளைப் பூர்த்தி செய்ய சுமார் 70,000 (எழுபதினாயிரம்) ரூபாய் தேவையாயிருக்கு மென்றும் எதிர்பார்க்கப்படுகின்றது.

5. கோபுரங்களின் சீர்திருத்தம். பாக்கி நிற்கும் பிராகாரங்களில் கல் பரப்பு வேலை, மஹா கும்பாபிஷேகத்திற்காக 20 யாக சாலைகள் நிர்ணயித்து, யாகங்களை நடத்துவது மஹா கும்பாபிஷேக காலத்தில் பல திறத்தார்க்கு உணவளிப்பு முதலிய கைங்கர்யங்களைப் பூர்த்தி செய்வதற்கு, தரும சிந்தையராம் பக்த சிரோன்மணிகள் யாவரும் தங்களாலியன்ற பொருள் உதவி புரியுமாறு மிகவும் விநயத்துடன் பிரார்த்திக்கின்றோம்.

6. ஏதாவது கைங்கர்யத்திற்கு நிர்ணயித்த தொகையைப் பூர்த்தியாகவாவது அல்லது ஒரு பாகமாவது, அவரவர்கள் இஷ்டப்படி கொடுக்கலாம். இந்த தர்ம கைங்கரியத்திற்கு உதவி செய்தவர்கள் பெயர்கள் அவரவர்கள் உதவிய தொகைக் குறிப்புடன் பிரசுரிக்கப்படும்.

7. உதவி செய்பவர்கள் தங்களுடைய உதவியை ரொக்கமாகவாவது பொருள் ரூபமாகவாவது கொடுக்கலாம். இன்னும் விபரங்கள் தெரிய விரும்புவர்கள் "திருத்தணி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானம் ஜீர்ணோத்தாரண மஹா கும்பாபிஷேக கமிட்டி காரியதரிசிக்கு" எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

டாக்டர். ஆர். எம். குருசாமி முதலியார், B. A. M. D. தலைவர்.

